AUM

# A WORK (IN TAMIL)

ENTITLED

**The Sarva Loka Rodya Swaraj**

OF

**SRI VENKATESA VIRAT GOVINDA BALAJEE SWAMI**

AND

**The 51 sorts of Sarvothama Commands**

OF THE INDIAN MAHA RISHEES

IS

one of the works of the Divine secrecies in 1,000 strings to Sri Virat Devi No. 300 and odd

IS COMPILED

on the Authorities of Divine Secrecies in the year 1910

*as perceived by*
*his Super-Acute-Spiritual Experience*

BY

**SRIMAN DEVI BALA SUBBARAYA DEENA DAYALA SADHU**

The son of the late Sriman Nagalla Ranganayakulu Doss Garu
(Rendered Medical Services till 1875.)
*the Palace Physician to H. H. the then Maharajah and His Royal Family the descendants of the Sri Authi Kulasekara Alwar of Travancore State.*

AND

The Humble Desciple of the Sacred Siddha Mutt
**Sri Kerala-Gutta, Sri Pothigai,**

AND

*The Prophet of Madras, well versed with extraordinary executing, powers*

AND

One given up a slave to the Devasthanam

OF

**Sri Venkatesa Virat Govinda Balaji Swami of Tirupati**
*The Lord, the Saviour and the Sin Remover of the world*

AND PUBLISHED BY

one of the Sadhu's desciples, in the year 1926
to obtain His Special Blessing.

[PRICE 6 ANNAS, POSTAGE EXTRA.]



---

ஸ்ரீ ஸேடி சாது அவர்களின் லோகோபகார சரிதைச் சுருக்கம் 0-4-0.

A work in Tamil containing brief works on the public services of the author (the Sadhu) is published separatel

[PRICE 4 ANNAS, POSTAGE EXTRA.]

# THE DEDICATION AND THE 3 MOTIVES.

This work entitled—"The Sarvaloga Radya Swaraj of Sri Venkatesa and the 51 Sarvothama commands" is most respectfully and loyally dedicated in the year 1926.

TO

H. H. Sri Padmanabha Dasa Vanchi-Pala Rama Varma Kulasekara Kiritapati Manney Sultan Maharajah Raja Ramaraja Bahadur, Shamsher Jang.

THE MAHARAJAH OF TRAVANCORE.

**And the Regent.**

H. H. Sri Padmanabha Sevini Vanchi Dharma Vardhini Raja Rajeswari Maharani Setu Lakshmi Bai.

AND

THE ROYAL FAMILY.

BY THE AUTHOR

**Devi-Bala Subbaraya Deena Dayala Sadhu**

THE SON OF THE LATE

SRIMAN N. RANGANAYAKULU DOSS GARU,

(*First Class Apothecary and Palace Physician to the then H. H. The Maharajah and his Royal Family.*)

*1stly*:—In commemoration of the Royal Family of Travancore, of their bounden duties to observe and fulfil the abeeshtas of Sri Authi Kulasekhara Alwar, their grand and great Divine predecessor, concerning His long wished services to Sri Venkatesa of Tirupati.

*2ndly*:—And thus be liable to fulfil in continuation of the medical helps and services of the Hereditary Rights in the form of the additional and extraordinary asteral—help and asteral safe-guard for the welfare of H. H. and His Royal family by equipping personified Divine Graces by Chit-Vilasic virtues.

*3rdly*:—In intimation of the clear insight to the author's beloved brothern (the Travancorians) with regard to the recent and future political and social struggle, etc., and do the needful to keep safe the Harmony and Peace of their ancestral state, without upsetting the Dharmas of the sacred and the ever-charitable Kerala-Nadu (Thiruvathankodu Samasthanam) the author's mother land, (weeding away the Tyranies if any) and thus may save themselves by observing the 51 sorts of endeavours of the Swe-deva Movement, of the Siddha Samaj from pitiably falling victims to the ensuing Great Revolutionable the state of the world, which conveys with it, the enormously blazing great fire of Divine Wrath and its results of Danger, Fear, Anarchy, etc. "The Asathyakala—Agni", and thereby become prepared so as to be liable to enjoy the Sarva-loga-Radya-Swaraj of Sri Kalou Venkata Nayaka, the Lord and the Sin Remover of the world. By observing the 51 Sarvothama commands of the sages.

## சமர்ப்பணமும் மூன்றுவித உத்தேசங்களும்.

ஸ்ரீ வெங்கடேசரது சர்வலோக ராஜ்ய ஸுவராஜ்யமும் 51-வித சர்வோத்தம விதிகளும் என்னும் இந்த திவ்ய நூலானது திருவாங்கூர் சமஸ்தானத்தில் முன்பு இராஜ குடும்ப வைத்திய பண்டிதராயிருந்த (முதல் தர அபாத்திகரி) நகல - அரங்கநாயகலு தாஸ் அவர்களின் அருந்தவப் புத்திரர் ஸ்ரீமான் தேவி பாலசுப்பராய நீனதயால சாதுவாகிய நூலாசிரியரால்.

இராஜ இராஜேஸ்வர ஸ்ரீ பத்மநாப தாச வஞ்சிபால இராம வர்ம குலசேகர கிரீடபதி மன்னி சுல்டான் மஹாராஜ ராஜ இராமராஜ பகதூர் ஷாம்ஷேர்ஜங் திருவாங்கூர் மஹாராஜா அவர்களுக்கும்:—

இராஜ இராஜேஸ்வரீ ஸ்ரீ பத்மநாப ஸேவினி வஞ்சி தர்ம வர்த்தினி சேது இலக்ஷ்மிபாய் மஹாராணி அவர்களுக்கும்:—

மாட்சிமைகள் மிகுந்த திருவாங்கூர் சமஸ்த்தான மஹா ராஜ குடும்பத்தவர்களுக்கும்:—

மிகுந்த மரியாதையாயும் இராஜ விஸ்வாஸமாயும் அடியில் குறிப்பிடும் மூன்றுவித முக்கிய உத்தேசங்களை முன்னிட்டு 1926ஹுத்தில் சமர்ப்பணம் செய்திருக்கிறது:—

மேலே குறிப்பிட்ட மூன்றுவித உத்தேசங்கள் பின் வருபவைகளாம்.

முதலாவது:—மஹா மாக்ஷிமைகள் மிகுந்த திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் உள்பட மேற்படி இராஜ குடும்பத்தவர்களின் பூர்வ தேவாம்ஸ மூதாதையும், குலமுதல் வரும் பக்த சிரோன்மணியாயும் இருந்த ஸ்ரீ ஆதி குலசேகர ஆழ்வார் அவர்களது அவர்கள் திருப்பதி ஸ்ரீ வெங்கடேஸ பெருமாளிடத்தில் இவர் ஈடுபட்ட விஷயமாய் திருவேங்கட முடையவருக்கு அபீஷ்டங்களாக இவர் உணர்ந்தறிந்தவாறு இவர் அநுஷ்டித்து பூர்த்தி செய்ய ஒரே எக்கமாயிருந்த இவரது அபீஷ்டங்களை மேற்படி ஆழ்வார் அவர்களது பரம்பரையினர்களான இப்போதைய மாட்சிமைகள் மிகுந்த மஹா ராஜா உட்பட மேற்படி இராஜ குடும்பத்தவர்கள் மேற்படி ஆழ்வாரது அபீஷ்டங்களை பின்பற்றி தாங்கள் செய்ய கடமைப் பட்டிருப்பவைகளை மேற்படி தம் மூதாதைக்கு செய்யவேண்டிய இவர்களின் கட்டாய கடமை என்று கொண்டு, ஆலஸ்யமில்லாமல் தொடர்ந்து அநுஷ்டிக்கும்படி ஞாபகப் படுத்தல்:—

இரண்டாவது:—இப்படி மேலே சொன்ன முதலாவது உத்தேசப்படி ஸ்ரீ ஆதி குலசேகர பெருமானது மேற்படி அபீஷ்டங்களை ஞாபகப்படுத்து கிறபடி மேற்படி இராஜ குடும்பத்தவர்கள் அநுஷ்டித்து ஈடுபடுவதால், ஜனிக்கும் சித்விலாச புண்ணியங்களால் தேவாநுக்கிரக சாதனங்களையும் தேவ

அருள் துணையையும் சுரக்கப்பெற்று இந்நூலாசிரியனுகிய என்னுடைய தந்தை யின் வழியாக மேற்படி ராஜ குடும்ப இராஜ வைத்ய ஊழிய பரம்பரா உறி மையைத் தொடர்ந்து இப்போதும் ஒருவாறு செய்யும் காரியமா யிருப்ப தன்றி இவ்வித ஸ்தூல தேஹ வைத்யத்திலும், மிகுமேன்மையானது மஹா பலமுடையதுமான தேவாநுக்கிரக தேவப்ரசாதங்களால் எமது மாட்சிமை கள் மிகுந்த மஹாராஜா அவர்களையும் இராஜ குடும்பத்தவர்களையும் இவர் களது ஸ்தூல, சூட்சுமாதி தேஹங்களை, பாதுகாத்து, ஆயுள், ஆரோக்கி யாதிகள் உண்டாகும்படி செய்தல் :—

மூன்றாவது:—(இந்நூலாசிரியனுகிய) எனது ஜன்ம தேச அதிப்பிரிய சகோதரர்களான திருவாங்கூர் சமஸ்தான வாசிகளுக்கு இப்போது சேர்ந்துவருவனவும் (இனிமேல் சேரவிருப்பனவும்) தேச சம்பந்த மும், ஆசார சம்பந்தமுமான கொழுப்பங்களையும் போராட்டங்களையும் மாற் றியும், இவர்களின் பூர்வீகமானதும் தெய்வாம்ஸமானதும் தேவ அருள் களைப்பெற்றதும் தேவாம்ஸங்கள் அமையப்பெற்றதும் சதா தான தர்மாநுஷ் டானங்களிலும் வேத வைதீக ஆசார அநுஷ்டாதிகள் நிலைபெற்றதுமான இவர்களின் புராதன சமஸ்தானத்தின் ஸ்வதர்மங்களுக்கு பின்னம் வராமல் (ஏதாவது அதர்மமாகிய கொடுமைகள் உள்ளே நுழைந்திருந்தால் அவைகளை பிடுங்கி எறிந்து விட்டும்) கேரளநாடாகிய (திருவதாம் கோடு சமஸ்தானம்) என்னும் எனது தாய்நாட்டின் ஸ்வதர்மங்களையும் நித்திய சமாதானத்தையும் நிலைநாட்டும் நிமித்தம் அறிவிக்கப்படும் விசிதமான வெளிச்சம் போன்ற விநய விண்ணப்பங்களை முன் அறிவித்தல் :—

விசேஷ குறிப்பு:—இப்படி எனது சகோதரர்களாகிய திருவாங்கூர் சமஸ்தான வாசிகளான மஹா ஜனங்கள் மேலே அறிவித்திருக்கும் விசித வெளிச்ச விண்ணப்பத்தின்படி நடந்து, தற்காலம் நடந்துவரும் தேவகோப காரணமாய் ஜனித்திருக்கும் அசத்தியகால மஹாஜ்வாலா அக்னியின் காரியங் களான அபாயம் பீதி, அராஜீக மாதி வெம்பலங்களின் வாயிக்கு இரையா காமல் சித்த சமாஜத்தின் 51-வித ஸ்வதேவ பிரயத்தனங்களின்படி ஒழுகி தங்களை இரட்சித்துக் கொள்வார்களாக. இப்படி தங்களை இரட்சித்துக் கொண்டு, சித்த சமாஜ மஹனீயர்களின் 51-வித ஸர்வோத்தம வுத்தரவு களின்படி அனுஷ்டித்து சர்வலோகத்தவர்களின் பாபங்களை மன்னிப்பவ ரான ஸ்ரீகலோ வேங்கட நாயக விராட்டு பெருமானது சர்வலோக ராட்ய ஸ்வாராஜ்ய சாம்ராஜ்யத்தை (எனது சகோதரர்களான திருவாங்கூர் சமஸ் தான வாசிகளும்) அநுபவிப்பார்களாக.

# ஸ்ரீ வேங்கடேசரது சர்வ லோகராட்ய சுவராஜ்யமும் (இவரது திவ்யாநுக்கிரக நிமித்தம் நாம் அநுஷ்டிக்கவேண்டிய)

# 51-வித சர்வோத்தம விதிகளும்.

## இந்த தேவரகஸ்ய நூலானது.

(1) வைதிக அநுதாபி, (2) சாது, (3) சாது துங்கம், (4) தீனதயாளு (5) ஆஸ்திக நிருபண சமர்த்தர் (6) சதா திருவடி தரிசனுணர்ந்தர், (7) தங்வந்ரி சிகாமணி, (8) வாக்குவல்லபம்பெற்ற சென்னை தீர்க்க தரிசி, (9) மஹான், என்பதாதி சிறப்பு பெயர்களை வித்வான்களாலும், வித்வ ஜனகோஷ்டிகளாலும் கொடுக்கப்பெற்று வாய்ந்தவரும், (10) (ஸ்ரீ வெங்கடேச ஜீவன் முக்த ப்ரோட்ச சத்தியகால உதய ஞானத்தை போதிக்கும்) சித்த சமாஜ பிரசுரங்களின் ஆசிரியரும் (11) சித்த சமாஜத்தின் நிர்வாக காரியதரிசியும், (12) மறைந்துபோன ஆயுர்வேத சித்தௌஷத வயித்ய முறையை விருத்திக்கு கொண்டு வரும் நிமித்தம் 1887ஆு௵த்தில் ஸ்தாபிக்கப்பட்ட "ஆதிசித்த வயித்தியசாலை" என்னும் சென்னை விக்டோரியா ஜுபிலி சித்தௌஷத சாலையின், ஸ்தாபக அதிபரும், (13) மஹாராணி விக்டோரியா சக்கிரவர்த்தினி (ஞாபகார்த்த) வைதீக ஞான பிரசுரங்களின் ஆசிரியரும், (14) நம் இந்தியா முதல் இப்பேருலக க்ஷேமத்தை முன்னிட்டு நம் மஹா பிரிட்டானியா, மஹாராஜா இந்திய சக்கிரவர்த்திகளுக்கு, இந்திய ப்ரதிநிதித்வ வந்தனோபசார வாழ்த்து நூல்களாக ஆக்கி, அநுப்பின ஸ்ரீ வேங்கடேச அபராத க்ஷமாபணம் உட்பட, தேவரகஸ்ய களஞ்சிய 5-வித முதல் நூல்களின் (The five words of five groups of divine secrecies) ஆசிரியரும், (15) மணிமந்த்ர அநுக்கிரக (சாதன) சித்த ஆயுர்வேத பண்டிதரும் (16) தேச பொது நல விஷயங்களில் வெகு காலம் தொடர்ந்து பரோபகாரமாய் உழைத்து வந்தவரும், இப்படியே உழைத்து வருபவரும், (17) அன்னிய மத ஆபத்துக்களினின்று இந்து மதத்தை தற்காத்தலில் நிமித்தம் இந்து லகுலேக சங்கத்தின் (The Hindu Tract Society) கவுரவ பிரசாருகராய், உழைத்து வந்தவரும் (18) ஆதியாதவ குல சங்கமாகிய யது குல உத்தாரண சங்கத்தின் ஸ்தாபகராயும், உபகாரியதரிசியாகவும் இருந்து பல அநுபவ நீதியான குல பொது நல விஷயங்களைச் செய்தவரும் (19) கல்வி கற்கும் சிறுவயதிலேயே இவரது நற்குண நற்செய்கைகளுக்காக ஸ்ரீ ஆதி குலசேகர ஆழ்வாரது பரம்பரையினரான திருவாங்கூர் மஹாராஜா ஸ்ரீ ராம வர்ம குலசேகர மஹாராஜா அவர்களிடத்தில் பலஜாதி பலமத கல்விமான்கள் நிறைந்த பெரிய சபையில் 3-வருஷங்களில் 3-புத்தகப் பரிசுகளும் மேற்படி மஹாராஜா அவர்களால் "அங்ஙனரைப் போலாகும்" என்பது முதலான ஆசீர்வாதங்களைப் பெற்றவரும் (20) தர்ம விருத்தமாய் பேசியும் ஒழிகியும் வந்த ஸ்வமத வித்வான்களில் 300-பேரை லலிதா வாதத்தால் மேற்கொண்டு ஸ்ரீ வேங்கடேச அபராத க்ஷமாபணம் என்னும் நூலை. இப்பேருலகத்தின் பாவ மன்னிப்பு காணிக்கையாகவும், இந்தியர்களின் வருங்கால க்ஷேமம், உயர் உன்னத பதவிகள் ஸ்வராஜ்யம், ஸ்வேச்சை இவர்களது பூர்வீக ஸ்வாதந்த்ர மாநிகளுக்கு சாதனோபாயமாகவும் ஸ்ரீ சிவாசப் பெருமானது அங்கீகார சாஸனம் போன்றதாகவும் [illegible] ஆக்கி அனுப்பின இந்தியா மஹரிஷிகளின் திவ்யாக்ஞா முன்னெச்சரிக்கையான [illegible] தேவரகஸ்யநூலை திருப்பதி மஹந்து ஸ்ரீமத் [illegible] அவர்கள் மூலமாய் திருவேங்கடமுடையானுக்கு சமர்ப்பித்திருப்பவரும் (21) [illegible] (கோன) நாட்டின் பிரசார [illegible] [illegible]

னத்தின் ஸ்ரீ ஆதி குலசேகர ஆழ்வார் அவர்களின் பரம்பரை மஹாராஜாக்களான மகா மாட்சிமைகள் மிகுந்த (ஆயிலியம் ராஜா குடும்ப) ஸ்ரீராமவர்ம குலசேகர மகாராஜா அவர்களின் அரண்மனை ராஜகுடும்ப வயித்திய பண்டிதரும், (முதல்தர அபாத்திகரி யென்னும் ஆங்கில வயித்ய பண்டிதருமான ஸ்ரீமான் நகள்ள - அரங்கநாயகுலு தாஸ், அவர்களின் அருந்தவ புத்திரரும், (22) ஸ்ரீ பொதிகை ஸ்ரீ கேரளகட்ட சித்த மடாலயத்தின் ஊழியரும், (23) இந்தியா முதல் இப்பேருலகமெங்கும் பரவிவரும் ஆரிய மதங்கள் அநாரியமதங்கள் ஆகிய இவைகளின் உத்தம, மத்திம, சுதர்மங்களை ஆதார ஆஸ்பதமாகக் கொண்டு பூர்வீக இந்திய மஹரிஷிகளின் ஆதி இந்து மதமாகிய சாவாக்கல்வி என்னும் பொந்தியோட கைலாசம் பெறும் மதம், என்றும், பொந்தியுடன் வைகுந்தம் பெறும் மதம் என்றும், பிணி மூப்பு சாக்காடுகளை ஒழிக்கும் மதம் என்றும் இந்திய மூதாதைகள் பெற்றிருந்த இந்திய ஸ்வராஜ்யம், இப்பேருலக சுதந்திரங்கள் சர்வலோக ராட்ய சுராஜ்யம் ஆகிய இவைகளை தப்பாது இந்தியர்களுக்கு கொடுக்கும் மதம் என்றும் சொல்லப்படுகிற சித்தி யோகமுத்தி பெறும் சரீரத்ரைய ஜீவன் முக்த பதவியை கொடுக்கும் மதத்தை மறுபடியும் முன்போல ஸ்தாபிக்கும்படி செய்ய முயர்ச்சித்து வருபவரும், (24) ஸ்ரீமந் நாராயணர் தமது இடது திருமார்பில் தரிக்கும் தேவ ரத்னமாகிய கௌஸ்துபாம்ஸராய் திருவவதரித்த ஸ்ரீ ஆதிகுலசேக ராழ்வாருடைய திவ்யாபீஷ்ட ரகசியங்களின்படி ஸ்ரீ வேங்கடேச பகவானுடைய (26-வித தேவ ரகசிய நிறைவேறுதலுக்கு சாதகமான) "சர்வரோக ஹர காயம்கல்ப ஞானசாதன அம்ருதபான கைங்கரியம்" என்னும் சஞ்ஜீவி மூலிகா கியாழ பானத்தை திருவேங்கட திருப்பதியில் வினியோகிக்க ஏற்பாடுகள் செய்ய, சர்வ சித்தமாயிருப்பவரும், (25) முக்கியமாய் ஸ்ரீ ஆதிகுல சேகரப் பெருமானுடைய திவ்யா பீஷ்டங்களை நிறைவேற்ற நிமித்தம் திருவாங்கூர் ராஜ குடும்பத்தினர்களின் பிரதிக்கு, தன்னை ஸ்ரீ வேங்கடேச தேவஸ்தான தெய்வாபீஷ்ட அடிமையாக ஒப்புக் கொடுத்திருப்பவரும் (26) தாஸாநுதாஸனும், அடியார்க்கடியானுமான

ஸ்ரீமான் தேவிபால சுப்பராய தீனதயாள ஸாது அவர்களால்

ஸ்ரீ வேங்கடேச பகவானது அபீஷ்டங்களாக இவர் உணர்ந்தறிந்தவைகளை இவரது பரமசூட்சும தரிசனத்தில் இவர் ஈடுபட்டு வரும் ஸ்ரீ வேங்கடேச பகவத் பக்தியினுல் தேவரகஸ்ய ஸ்ரீ விராட் தேவி சகஸ்ர மாலிகா என்னும் நூல்களின் மூந்நூற்று சொச்சம் இலக்கமுடைய தீர்க்க தரிசின ஞானமலர் நூலாக 1910ஷ த்தில் ஆக்கின இந்நூலே ஷை சாது அவர்களின் அநுக்கிரகத்தையும், கடாட்சத்தையும் பெறவிரும்பும் அன்பர்களில் ஒருவரால் பரோபகாரத்தை முன்னிட்டு 1926ஷ த்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

விலை அணு 6. தபால் கூலி ப்ரத்யேகம்.

இந்நூலின் ஆசிரியரான ஷை சாது அவர்களின் குணவிசேஷங்களை ஒருவாறு திரட்டி ஷை சாது அவர்களிடத்தில் நாம் அநுஷ்டிக்க வேண்டிய பாகவத பக்திகளுக்குறிய உபநூலாக இவரது அன்பரில் ஒருவரான (ஸ்ரீமான் வ-ரா-ராயுடு அவர்களால்) ஆக்கின ஷை சாது அவர்களின் லோகோபகார ஊழிய சரிதை சுருக்கம் என்னும் நூலே இந்நூலுடன் சேர்த்து வெளிப்படுத்த முன்பு உத்தேசித்ததை மேற்படி உபநூலின் முகவுரையில் தெரிவித்திருக்கும் காரணங்களை முன்னிட்டு இந்நூலுடன் சேர்த்து வெளிப்படுத்த வில்லை தனிப்பிரதியாக வெளிவரும்.

ஷை சாது அவர்கள் லோகோபகாரமாய் உழைத்து வந்த சந்தர்ப்பங்களில் சம்மந்தப்பட்ட தேசபொது நல விஷயங்களிலும் மதபொது நல விஷயங்களிலும், தொண்டுகள் புரிந்த பலபெரியோர்களின் சம்மந்த விசேஷ விஷயங்களும் இந்நூலில் அடங்கியிருக்கும்.

விலை அணு 4. தபால் கூலி ப்ரத்யேகம்,

## AUM.

May God save their Imperial Majesties George Vth King of Great Britain and the Emperor of India—and all the benign rulers of the world, and the ruled millions (of the world).

May the benign rulers and the ruled millions of the world, live long with health, wealth and all-wise, for administering the Go-Paripalana Dharma (the forbiddens of the slaughter of cows) and Go-Dharma-Paripalana (abstaining cows, etc., as food etc.) respectively, and thus be liable to remove from (1) Dethronings, (2) Republic Rulings, (3) The Babes in the Royal Families for the Bullock-Headed Monarchs, which are the three great and extreme Perils of the Present Day, and the Future (the great revolutionable state of the world).

---

மஹா மாக்ஷிமைகள் தங்கிய மஹா பிரிடானியா அரசரும் இந்திய சக்கிரவர்த்தியுமான ஐந்தாவது ஜார்ஜ் சக்கிரவர்த்தி அவர்கள் முதல், இப்பேருலகத்தின் காருண்ய ஆளுவோர்களையும், கோடிக்கணக்கான ஆளப்பட்டு வரும் மஹா ஜனங்களையும் கடவுள் இரட்சிப்பாராக:—

அசத்திய கால அக்கினியின் சம்பவமாய், இப்போதும் வருங் காலத்திலும் நேர்வனவும், நேர விருப்பனவுமான, (1) இராஜாக்கள் தேவாம்ஸ சிம்மாசனங்களிருந்து இரக்கப்படுதல், (2) குடியரசு ஆளுகை, (3) தேவ கோப வீட்சண்யத்தால் இராஜ குடும்பங்களில் மாட்டுத்தலை சிசுக்களின் உற்பத்தி ஆகிய இந்த மூன்று வித பெரியனவும் அபரிமிதமுமான வெம்பல விஷேஷண்யங்களினின்று நீங்கு நிமித்தம், இப்பேருலகத்தின் ஆளப்படும் மஹா கோடி ஜனங்களும் காருண்ணிய சக்கிரவர்த்திகள், அரசர்கள் முதலிய ஆளும் வர்க்கத்தினர் யாவரும் கோவினங்களின் பட்சணமாதி விசர்ஜ்ஜனமாகிய கோதர்ம பரிபாலனத்தையும், பசுக்கொலையை நிறுத்துதலாகிய கோபரிபாலனத்தையும் முறையே அநுஷ்டித்து ஆரோக்யம் ஐஸ்வர்யம் சுத்த ஞானங்களுடன் நீடூழி வாழ்வார்களாக.



## THE GOAL OF THE SIDDHA SAMAJ.

---

I. To endeavour and fulfil for administrating the benign rulers of the world, in favor of the Go-Paripalana Dharma (The forbiddens of the slaughter of cows):—

II. To up-lift India (the sacred land of Bharata), to its ancient world-esteemed and revered height, which was, and is to be—

(1) the mother-land of the Great warriors and the Great conquerors of the world; (2) the land of the Masters, Organizers and Teachers of various Religions; (3) The safe-abode of the

now imperceptable and Immortal Indian Great Fore-fathers; (4) The mother-land of the well experienced Mechanical and Industrial experts, and Masters who have well mastered the 64 Indian Arts, commencing from Orthography to Avasthaprayoga, and been the Teachers of China, Europe, etc., similarily (5) the birth place and abodes of the authors and organizers of the magnificient and Ambrosial 64 Arts (of the Olden and Golden India), which specially treat not only matters concerning human bodies as they treat also that of minds and souls such as Health, Wealth, Longevity and all sorts of happiness—(6) And the Hereditary soil for the several incarnations of the one Great Omnipresent God. (The Lord:—The Saviour and the Sin Remover).

III. Swaraj & S. L. R. Swaraj by Swe-Deva.

## சித்த சமாஜத்தின் முடிவான நோக்கங்கள்.

(I) கோவினங்களை (பசு, எருது, கன்று) கொல்லாமல் நிறுத்தி இவைகளை காத்தலாகிய கோபரிபாலன தர்மத்தின்படி, இப்பேருலகத்தின் ஆளுவோர்கள் செங்கோல் செலுத்தும்படி செய்தல்.

(1) மஹா வீராதி வீரர்களுக்கும் இப்பேருலக ஜெய ப்ரதாப கெடிஸ்தல மஹா சக்கிரவர்த்திகளுக்கும் தாய் தேசமாய், இருந்ததும், வருங்காலத்தில் முன்போலவே விளங்கவிருப்பதும், (2) பல மஹரிஷிகளுக்கும் பல மதப்ரவர்த்தகர்களுக்கும் பல மதாசாரியர்களுக்கும் சொந்த க்ஷேத்ரமாகவும், (3) சாகாக் கல்வி கற்று நித்யர்களாயும் தற்சமயம் அத்திருஸ்யர்களாயுமிருக்கும் இந்திய மூதாதைகளுக்கு ஏற்ற வாசஸ்தானமாக விருந்து வருகிறதும், (4) அக்கர விலக்கணம் முதல் அவஸ்தை பிரயோகம் ஈறாகவுள்ள (Orthography to Avasthaprayoga) 64 இந்திய கலைக்கியானங்களை நன்கு பயன்ற வல்லவர்களும், சீனு, ஐரோப்பா முதலிய பிரதேசத்தவர்களுக்கு போதித்த, சற்குருமார்களும். மக்களின் ஸ்தூல தேஹ சம்பந்தமாத்ரமன்றி, இவர்களின் மன ஆன்ம விசேஷ சம்பந்தமான, ஆயுள் ஆரோக்ய ஐஸ்வர்யாதி வாழ்வுகளுக்கு சம்பந்தா சம்பந்தங்களை போதிக்கும், பூர்வீகமான பொன்மய இந்தியாவின் மஹிமைகள் வாய்ந்ததும் அமுர்தம் போன்றவைகளுமான (64) கலைஞானங்களை கசடறக்கற்ற அநுபவிகளான மேதாவிகள் பிறந்து வசித்த பூஸ்தானமாயும், (5) இரக்ஷகராகவும், பாப மன்னிப்பவராகவும், சர்வ வியாபகராகவும் உள்ள தனி முதற் கடவுளின் பற்பல திரு அவதாரங்கள் செய்ய பரம்பரா உரிமை வகித்த பூமியாகவும் இருக்கும்,

(II) புண்ணிய பூமியாகிய பரதக்கண்டம் என்கிற இந்தியாவை, பேர்வுலகத்தவரால் கவுரவிககப்பட்டும், மரியாதை, வழிபாடுகள் செய்யப்பட்டும் வந்த, தனது பூர்வீக உன்னத உயர்பதவிக்கு, இப்பேருலகம் கண்டுகளிக்க (இவ்விந்தியாவை உயர்த்துதல்.)

(III) ஸ்வதேவமுயற்சியால் சுயராஜ்ஜியத்தையும் சர்வலோக சுயராஜ்ஜியத்தையும் பெருதல்.

AUM.

## A SUMMARY NOTE.

Of the Formation (of the Imperceptible Inner Section) of the Sidha Samaj, for the preparedness to receive the over-pouring Inspirations of the Miraculously Glazing, Rays of the dawning Great Astral-Current (Sathya Kala Udhayam), Jeevan-Muktha Frotsha, Sree Venkatesa Abeeshtas, the Sarva-Lokha-Rodya Swaraj of Sree Venkatesa-Virat Govinda Balajee swami, (with the inspirations of the good-germs sowing subtle bodies) :—

(I) The Supreme Lord (The Nayaka) of the Throne of the Sarva—Loka—Rodya Swaraj :—

**Sree Kalou Venkata Nayaka of Tirupati.**

The Lord, the Saviour, and the Sin Remover of the world, with the within Absorbed Divine Powers of the various Religious Gods, (as Yako-Narayana.)

(II) The Great and Divine commander-in-chief (with sole and full commanding powers), to unceasingly whirl the Astral-wheel, till the surrender of the Anti-Workers (the two brother monsters):—

**SWAMI-SREE-SIVA SUBRAMANYAJEE.**

(III) The Patron and Founder-President :—
Sri Agasthya (The Great Indian Maharishi).

(IV) The Sub Patrons and Vice-Presidents :—
The Immortal sages of Kerala Gutta, Sri Pothigai (South India.)

(V) The Properties of the Sidha-Samaj :—
The different religious Symbols, Temples, Holy and Sacred things, etc., and their Dharmas.

(VI) The Treasures and Astral Reservoirs of the Sidha-Samaj :—

1. The different sorts of Blessings and Divine graces generated and gathered by the Chit-Vilasic virtues on the basis of the 51 sorts of Swedeva endeavours.
2. The hitherto carelessly left Divine-Graces, etc.
3. The different sorts of Forsakened graces of the world.
4. The Divine Graces that were rearing and guarding the various moral and religious Dharmas or Observances, Oaths, Promises, etc.; and the special Dharmas of the different soils that are sacrificed, smashed, left to wither or decay.

5. The forsaken graces and the Astral gains of the different Nations Tribes, Societies, etc. :—
6. The forsakened graces and the Astral gains of the different Nations, Tribes, etc., that are heaped and reserved and preserved until further orders, and which are also increasing by the Astral interest in addition.
7. The Astraly Repaired and Renewed Divine powers of the different religious places of worship and the holy and sacred places:—
8. The Abundant astral gains generated by the Chit Vilasic virtues through the means of the Victoria Jubilee Sidha Medicines and the publications and revealations of the Sidha Samaj series and etc.

---

(VII) The Astrally working Volunteers :—

The Patriotically inspired and untimely Death-Suffered Patriots and mani-fold Martyr-dom-shipped astral-powers-bestowed and astraly maintained Politico-Martyrs, etc., of various countries, religions and creeds.

---

(VIII) The Astral Leaders, Masters and Great Teachers by good sowing inspirations and the well-wishers, The Promoters and the up-lifters :—

The Intermediate class of immortal sages of the Sidha—Samaj. With the inspired helps of the Personified Divine-Graces—

---

(IX) The Safe-guard Astral-Followers and Astral-Helpers in Times of great and urgent needs.

The Divine-Graces-in the form of persons :—

---

(X) The real Astral-Revewers of the world with extra ordinary poweis for over sewing all-abroad and do the all needfull.

The Veera-Jeevan-Muckthas and etc., who have attained and those who are to attain shortly, their worldly outer experience.

---

(XI) The Divine Supervisor, with full and sole powers on all matters concerning the movements of the Sidha Samaj :— And the master of all the senders of Messages (wireless Telegrams) Clairvoyance and the Prophecies on the authorities of the Divine Services :—

(The Siriya Thiruvadi) Sri Hanumanjee.

---

(XII) Private Personal and representative Secretary of the inner circle :—

THE SUPREME SPIRITUAL MASTER
MAHAN DEVI-BALA SWAMIJI.
THE OUTER PRACTICAL SECTION OF THE
SIDHA SAMAJ, ESTABLISHED IN 1885.

(XIII) The two (2) Financial (Material) Funds:—
S. L. R. S. Fund and T. A. E. B. Fund.

---

(XIV) The Private personal and the Responsible forwading Secretary :—

Sri Venkatesa Deva-Duttha—
Devi Bala Subba-Raya-Dheena-Dhayala Sadhu

---

(XV) The Anti-workers, The Rotators of the world and the so called (or false) Renewers of the world that augment the enormously blazing great fire of the great revolutionable state of the world and its results of Danger, Fear, Anarchy, Famine-rates, etc., and Dethronings and Decay by the inspired and affected endeavours of the evil-germs sowing subtle bodies :—

1. The long-starved and water-immersed Great Indian Monster of Godavari (Madras Presidency) with His various gangs of the different waters.
2. The Great American Monster with His under-ground gangs of different soils.

---

ADDRESS :—(1) D. B. S. D. D. SADHU,
The Siddha Samaj (Sree Venkatesa
Devasthana) Byragi Mutt Street,
32, General Muthiah Mudali Street,
Sowcarpet Post, George Town, Madras.

(2) D. B. S. D. D. SADHU,
C/o THE MANAGER,
Victoria Jubilee Siddhowshada Sala,
250, Mint Street, Mint Buildings Post,
George Town, Madras.

---

ஓம்.

தேவமய மஹாஜோதியாகிய சக்தியகாலத்தின் மஹா விசித்ர சக்தியுடைய உதைய கிரணங்களின் (இப்பேருலக மக்கள் அநுக்கிரகார்த்தம் செய்யும்) அதிகப்படியான ஆவாஹனங்களையும் ஜீவன் முக்த ப்ரோட்ச்ச கால சம்பவத்தையும், ஸ்ரீவேங்கடேச அபீஷ்டங்களையும், ஸ்ரீ வேங்கடேசர் சர்வலோக ராட்ய சுயராஜ்யத்தையும், (இப்பேருலகத்தவர்களாகிய) நாம் யாவரும் பெறும் நிமித்தம் சர்வ சித்தமாயும், சர்வ சுத்தமாயும், சர்வ ஆயுத்தமாயும் ஆகவேண்டிய

நம் கடமைகளினிமித்தம் அமைக்கப்பட்டிருக்கும் சித்த சமாஜத்தின் அதிருஸ்ய, ஆந்தரிக வகுப்பின் அமைப்பு முதலிய விஷயச் சுருக்கம்.

பரம பிதாவும், சர்வலோக ரக்ஷகரும், பாவ மன்னிப்பவருமான ஏகோ நாராயணரைப்போல பல மதக்கடவுளர்களின் சக்திகளை தம்முள் வகித்திருக்கும் (ஸ்ரீ வேங்கடேச விராட்டு கோவிந்த) பாலாஜி ஸ்வாமியாகிய

(I) ஸ்ரீ கலோவ் வேங்கட நாயகர்:—
சர்வ லோகாரட்ய சுவராஜ்ய சிம்மாசனத்தின் நாயகர்

(II) ஸ்ரீ சிவ சுப்ரமண்யக் கடவுள்:—
மஹாதேவ சேனாதிபதியும், எதிருக்கு வழிகளில் நடக்கும் இரண்டு சகோதர அரக்கர்கள், இவர்கள் வணங்கும் வரையில் கால சக்கிரத்தை ஓயாமல் சுழற்ற, சுயேச்சையும் சர்வாதிகாரமும் பெற்றிருப்பவர்.

(III) ஸ்ரீ அகத்திய மஹரிஷி:—
போஷகரும், ஆதிஸ்தாபன அக்ராசனாதிபதியுமா யிருப்பவர்.

(IV) தென் இந்தியா, ஸ்ரீ பொதிகை சித்த மடாலய க்ஷேத்ரத்தைச் சேர்ந்த ஸ்ரீ கோரளகட்ட (சரீரத்ரைய ஜீவன்முக்த) சித்த மஹனீயர்கள்:—
உப போஷகர்களும், உப அக்ராசனாதிபதிகளும்.

(V) இப்பேருலகத்தின் நானாமதங்களின், தேவ சின்னங்களும், தேவாலயங்களும், தேவ சம்பந்தமான பரிசுத்தமும், புண்ணியமும் அமைந்த சர்வ வஸ்துக்களும், அந்தந்த மதங்களின் அநுஷ்டான தர்மங்களும்.

## சித்த சமாஜத்தின் பரம சொத்துகள்.

(VI) சித்தசமாஜத்தின் (சித்விலாச) பொக்கிஷ களஞ்சியங்கள்:—
(1) நானாவித ஆசீர்வாதங்களும், சித்த சமாஜத்தின 51-வித ஸ்வதேவ பிரயத்தனங்களினால் ஜனிப்பித்து சேகரித்த பலவித தேவானுகிரகங்களும்,
(2) இது வரையில் ஆதரிக்கப்படாமல் அஜாக்கிரதையாய் விட்டு விடப்பட்ட தேவானுக்கிரகங்கள்.
(3) இப்பேருலகத்தின் அனாதமான திக்கற்ற தேவாநுக்கிரக புண்ணியங்களும்.
(4) நானாவித நீதிசம்பந்தமும், மதசம்பந்தமும் ஆன தர்மங்களையும், தர்மானுஷ்டானங்களையும், கூடவே பிரமாணிக்கங்கள், வாக்குதத்தங்கள் ஆகிய இவை முதலியவைகளையும், பல பூப்ரதேசங்களின் ப்ரத்யேகமான ஸ்வதர்மாசாரங்களையும், வளர்த்தும், பாதுகாத்தும்

வந்தவைகளும், பின்னர் கொல்லப்பட்டும், நசுக்கப்பட்டும் வாடிவதங் கும்படியாகவும் அல்லது அழுகிப்போகும்படி விட்டுவிட்டவைகள்.

(5) நானாவித வம்சம், குலம், இவை முதலியவைகளின் ஈாதனத்த சித்விலாச புண்ணியங்களும் தேவானுக்கிரகங்களும்,

(6) சித்விலாச புண்ணிய வட்டிகள் வுடன் சேர்ந்துமென் மேலும் குவிந்துவருமவைகளும் தக்கோர்களின் நியமனம் வரையில் பிரத்தியேகமாய் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருமவைகளான நானா வம்சங்கள், குலங்கள் ஆகிய இவை முதலியவைகளின் ஈாதனத்த சித்விலாச புண்ணியங்களும் தேவானுக்கிரகங்களும்.

(7) சித்த சமாஜத்தவர்களால் சித்விலாச புண்ணியங்களால் செப்பனிடப்பட்டும், புதுப்பிக்கப்பட்டும் இருக்கும் சகல விதி தேவானுக்கிரகங்கள்.

(8) விக்டோரியா ஜுபிலி (மணிமந்திர அனுக்கிரகம்) சித்ஔஷதங்களால் அதிகமாகவே ஜனிக்கும் சித்விலாச புண்ணியங்களும், இதுபோலவே சித்த சமாஜ பிரசுரங்களாலும் போதனைகளாலும் அதிகப்படியாக ஜனிக்கும் சித் விலாச புண்ணியங்களும்.

---

(VII) சித்த சமாஜத்தின் - சர்வ கார்ய சூட்சும தேஹ பிரயத்தினர்கள்:—

தேசாபிமானத்தால் தூண்டப்பட்டு காலத்திற்குமுன் மரணாவஸ்தையை அடைந்து, சித்த சமாஜத்தால், பல உயர்தர வீரமுனி பட்டங்கள் கொடுக்கப்பெற்று, (சித்த சமாஜத்தின்) போஷஞாதி ஆதரணைகளைப் பெற்ற, நானாதேச, மத, ஆசாரங்களுடைய வீரமுனி வர்க்கத்தினர்கள்.

---

(VIII) பல நூற்றாண்டுகள் ஜீவிய நிலையிலிருக்கும் சித்த சமாஜத்தின் மத்தியதர மஹனீயர்கள்:—

புருஷரூபமான தேவானுக் கிரகங்களின் உதவிகளால் உத்தம ஆவாகனாதி காரிய வழிகளை ஆதார உதவியாகக் கொண்டு இப்பேருலகத்தவர்களுக்கு உத்தம வழி காட்டிகளாகவும், எஜமான்களாகவும், மஹோபாத்தியாயர்களாகவும் இருப்பவர்களும், இப்பேருலகத்தவர்களின் நற்க்ஷேமாதி விருத்திகளை விரும்புமவர்களும், இவர்களை உயர் உன்னத பதவிகளுக்கு உயரத்தூக்கி விடுமவர்கள்.

---

(IX) அதி அவசர நேரங்களிலும், சந்தர்ப்பங்களிலும் இரட்சாபாது காவலின் நிமித்தம், சூட்சும பய உதவியாளர்களும், பக்கத்துணையாய் தொடர்பவர்களும்:—

புருஷரூப தேவானுக் கிரகங்கள்.

---

(X) உலகமுழுவதிலும் நடக்கும் சகல காரியங்களையும் இருந்த யிடங்களிலிருந்துகொண்டே மேல்பார்வை பார்க்கவும் இவைகளுக்கு ஆகவேண்டிய சகல காரியங்களைச் செய்யவும் அற்புத அதிகாரங்கள் பெற்ற இபபேருலகத்தை உத்தம வழிகளில் புதுப்பிக்கும் அவர்கள்.

இப்பேருலக விஷயமாய் பகிர்முக திருஷ்டி பெற்றவர்களும், அதி சீக்கிரத்தில் பெற விருப்பவர்களும் இப்போது அகமுக திருஷ்டியிலிருப்பவர்களுமான பலவித வீர ஜீவன் முக்த முதலிய வர்க்கத்தினர்.

---

(XI) ஸ்ரீ சிறிய திருவடி அனுமான்ஜி.

சித்த சமாஜத்துக்கு சம்மந்தப்பட்ட எல்லாவித காரியங்களுக்கும் சுயேச்சையாதி, பூரண சர்வாதிகாரம் பெற்ற தேவ விசாரணை கர்த்தரும், தேவஊழிய காரிய சம்மந்தமாய் அனுப்பப்படும். தீர்க்க தரிசனங்கள் தேவாபீஷ்டங்கள், தேவ இரகசியங்களாகிய முன்னெச்சரிக்கைகளை அநுப்பும் மஹனீயர்களுக்கெல்லாம் மஹா மஹனீய முதல்வர்.

---

(XII) சர்வ சுதந்தரமும், பிரதிநிதித்வ, அந்தரங்க காரியதரிசி.
(பரம இரகசியகாரண சற்குரு) மஹான் தேவிபால சுவாமிஜி.

---

## சித்த சமாஜத்தின் வெளிதா அனுபவ வகுப்பு 1885 ஹூத்தில் ஸ்தாபனம்.

(XIII) இரண்டு (2) வித (தனமய) நிதிகள்:—
(XIV) உத்தரவாத நிர்வாக காரியதரிசி:—
ஸ்ரீவேங்கடேச தேவதத்த தேவிபால சுப்பராய தீனதயாளு சாது.

---

(XV) வெகுகாலம் பட்டிணியாயும் ஜலத்தில்அமிழ்ந்து மிருந்த (சென்னை இராஜதானி) கோதாவரி யாற்றின், இந்திய மஹா அரக்கன், (இவனது நாலுவித நீர் நிலையங்களின் பலவித கூட்டங்களுடன்.)

அமரிக்கா தேசத்தின் மஹா அரக்கன் (இவனது நாலு அந்தர்முக பூப்ரதேசங்களின் கூட்டங்களுடன்.)

மஹா ஜ்வாலக்கினி மய அசத்திய கால அக்னியையும், இதின் காரியங்களான அபாயம், பீதி, அராஜகம், அகவிலையாதிகளையும், அரசர், சக்கிரவர்த்திகள், முதலியோர்களின் சிங்காசனம் தவிருதல், அழிவு எய்துதலாதிகள், ஆகிய இவை முதலிய துர்சம்பவங்களை உலகத்துக்கு பாலனிடும். துர் ஆகிகளின் ஆவாகனுதி ஆக்கிருதல்களால், விபரீதபடுத்துமவர்களான இப்பேருலகத்தை சுற்றி, சுற்றி ஓடுபவர்களும், இப்பேருலகத்தை புதுப்பித்ததுபோல போஷித்தனம் செய்பவர்களும். எதிருயுக்த வழிகளில் நடத்துபவர்கள்.

விசேஷ அறிவிப்பு:—சித்த சமாஜத்தின் விவகார சம்மந்தமான கடிதங்கள் முதலிய யாவும் தேவிபால சுப்பராய தீனதயாள சாதுக்கு அனுப்பவும்.

---

A. D. Press, Madras.

ஓம்.

சரீரத்ரய ஜீவன்முக்தர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீவேங்கடசைல ராட்நிவாஸ பரப்பிரஹ்மணேநம:

---

சித்த சமாஜ பிரசுரங்கள் — The Siddha Samaj Series

ஸ்வதேவ பிரயத்தினம் — Swedeva Movement

தேவரகசிய ஸ்ரீவிராட்தேவி ஸஹஸ்ரமாலிகா இல. 300 (சில்லரை.)

The Divine Secrecies in 1000 Strnigs to Sri Veerat Devi

No. 300 (& odd.)



# ஸ்ரீவேங்கடேசருக்கு சர்வலோகராட்ய ஸ்வராஜ்யமும்

(இவரது திவ்யானுக்கிரக நிமித்தம் நாம் அநுஷ்டிக்க வேண்டிய)

# 45-வித சர்வோத்தம விதிகளும்.

---

The Sarva Loka Rodya Sweraj for Sri Venkatesa

and

The 45-Sorts of Sarvothama Endeavours.

---

தேவிபால சுப்பராய தீனதயாள ஸாதுவால்

1910௵ ஆக்கப்பட்டு, 1925௵ செப்டம்பர்௴ பிரசுரிக்கப்பட்டது.

**1st Edition 1000 Copies.**

சென்னை,

தனியாம்பாள் விலாசம் பிரஸ்ஸில்

---

விலை] MADRAS. [அணா.

## இந்த தேவரகசிய நூலானது.

### எவரால் ஆக்கப்பட்டதென்பது.

(1) தேசமதப் பொதுநல விஷயங்களில், வெகுகாலம் தொடர்ந்து பரோபகாரமாய் உழைத்துவந்தவரும், இப்படியே உழைத்து வருபவரும்,

(2) மணிமந்திராநுக்கிரக சித்த ஆயுர்வேத பண்டிதரும்,

(3) மறைந்துபோன ஆயுர்வேத சித்தௌஷத வயித்திய முறையை, விருத்திக்கு கொண்டுவரும் நிமித்தம், 1887வருத்தில், ஸ்தாபிக்கப்பட்ட, "ஆதி சித்த வயித்தியசாலை" என்னும், சென்னை "விக்டோரியாஜூபிலி-சித்தௌஷதசாலையின், ஸ்தாபக அதிபரும்.

(4) ஸ்ரீவேங்கடேசவபீஷ்ட - ஜீவன்முக்தப்ரோட்ச - சத்திய காலோதய ஞானத்தைப் போதிக்கும், சித்தசமாஜத்தின் நிர்வாககாரிய தரிசியும்,

(5) மலையாள (கேரள) நாட்டின் சிரசாக விளங்கும், திருவாங்கூர் சமஸ்த்தானத்தின் ஸ்ரீஆதி குலசேகராழ்வார் அவர்களின், பரம்பரா மகாராஜாக்களான, மகா மாட்சிமைகள் மிகுந்த (ஆயிலியம்-ராஜகுடும்ப) ஸ்ரீராமவர்ம குலசேகர மகாராஜா அவர்களின், அரமனை ராஜகுடும்பவயித்தியபண்டிதரும், (முதல்தர அப்பாதிகாரியென்னும் ஆங்கில வயித்திய பண்டிதருமான) ஸ்ரீமான் நகன்னா அரங்கநாயகுலு தாஸ் அவர்களின் அருந்தவப் புத்திரரும்,

(6) தேவரகசிய சித்தாந்த உண்மை (முதல் பாகம்) என்னும், "ஸ்ரீவேங்கடேச வபராத க்ஷமாபணம்" முதலிய, சித்த சமாஜ பிரசுரங்களின் ஆசிரியரும்,

(7) முக்கியமாய், ஸ்ரீஆதி குலசேகரப்பெருமானுடைய திவ்வியாபீஷ்டங்களை நிறைவேற்று நிமித்தம், திருவாங்கூர் ராஜகுடும்பத்தினர்களின் பிரதிக்குதன்னை-ஸ்ரீவேங்கடேச தேவஸ்தான தெய்வாபீஷ்ட அடிமையாக ஒப்புக்கொடுத்திருப்பவரும்,

(8) ஸ்ரீமந்நாராயணர் தமது இடது திருமார்பில் தரிக்கும் தேவரத்னமாகிய கௌஸ்துபாம்ஸமாய் திருவவதரித்த ஸ்ரீஆதி குலசேகராழ்வாருடைய திவ்வியாபீஷ்ட ரகசியங்களின்படி, ஸ்ரீவேங்கடேசபகவானுடைய (26-வித தேவரகசிய நிறைவேறுதலுக்கு சாதகமான),-"சர்வரோகஹார—காயகல்ப—ஞானசாதன—அம்ருதபான கைங்கரியம்."—என்னும் சஞ்ஜீவி மூலிகா கியாழ பானத்தை திருவேங்கடத் திருப்பதியில் வினியோகிக்க ஏற்பாடுகள் செய்ய, சர்வசித்தமாயிருப்பவரும்,

குறிப்பு:—(இதன் தொடர்பை கடைசியில் பார்க்கவும்.)

ஓம்.

சத்தியோமுக்திபெற்ற-சீராத்திரைய ஜீவன்முக்தர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீவேங்கடசைல ராட்நிவாஸ பரப்பிரஹ்மணேநம:

---

ஸ்ரீவேங்கடாத்ரி சமஸ்தானம் - ப்ரஹ்மாண்டே நாஸ்திகிஞ்சன
ஸ்ரீவேங்கடேஸ ஸமோதேவோ - நபூதோ நபவிஷ்யதி:

---

# ஸ்ரீவேங்கடேசருக்கு-சர்வலோகராட்ய ஸ்வராஜ்யமும்

(இவரது திவ்யாநுக்கிரக நிமித்தம் நாம் அநுஷ்டிக்கவேண்டிய)

## 45-வித சர்வோத்தம விதிகளும்.

---

## முகவுரை

### I.

ஸ்ரீமந்நாராயணரான ஸ்ரீநிவாசரின் மூர்த்த திருக்கோலம்:—

ஸ்ரீய:பதியாய், ஸ்ரீவைகுண்டநிகேதனனாய், நித்யமுக்தாநுபாவ்யனாய், நிரதிசயாநந்தயுக்தனாய் அகிலஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதி லயகாரணனாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந்நாராயணன், இந்த லீலா விபூதியிலுள்ளவர்களும், தன்னைக் கிட்டி ஸர்வாபீஷ்டங்களையும் பெற்று மகிழ்ந்துய்யவேண்டுமென்று திருவுள்ளம்பற்றி, ''பான்சென்றுசேர் திருவேங்கடம்'' என்றபடி, திருவேங்கடத்தை யடைந்து, ஸ்ரீஅலர்மேல்மங்கைதாயாரை மணந்து, ஸ்ரீநிவாஸமூர்த்தி திருக்கோலங் கொண்டு, திருவேங்கடத்திருப்பதியில் எழுந்தருளி விளங்குகின்றார்.

### II.

திருவேங்கடத் திருப்பதி மஹாத்மியம்:—

(1) அத்திருவேங்கடமோ "புவநஸ்யமத்யே" என்றபடி மண்ணோர் விண்ணோரும் எளிதிலடைந்து சேவிக்கக்கூடியதாயிருக்கிறது. ஆழ்வார்களில் ''முடிவேந்தர் சிகாமணியாகிய குலசேகராழ்வாரும்'' "கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே" என்றும், "மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே" என்றும், "செண்பகமாய் நிற்கும் திருவுடையனாவேனே" என்றும், ''தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவேனே'' என்றும், ''கானாறாய்ப்பாயுங் கருத்துடையேனாவேனே" என்றும், "செடியாயவல்வினைகள் தீர்க்கும் திருமாலே! நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் வாசல் அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும் படியாய்க்கிடந்துன் பவளவாய் காண்பேனே'' என்றும், ''திருவேங்கடமென்னும் எம்பெருமான் பொன்மலைமேலேதேனுமாவேனே'' என்றும், மிகு ஆர்வத்தோடு திருமலையில் ஏதேனுமொரு ஜன்மத்தை ஆசைப்பட்டார்.

(2) திருவேங்கடசரிதை விஷயமாய், பிரம்மாண்டபுராணம்-பவிஷ்யோத்ரபுராணம், வராகபுராணங்களின் அணிபு:—திருமலை, திருப்பதி என்று சொல்லப்படுகிற திருவேங்கடமலையானது திருவேங்கடத்தான் என்றும் திருவேங்கடமுடையானென்றும் சொல்லப்படுகிற ஸ்ரீனிவாசரின் வாசஸ்தலமாக யிருக்கிற க்ஷேத்திரமாம். தன்னை யடைந்தவர் பாவமனைத்தையும் ஒழிப்பதனால், இம்மலை "வேங்கடம்" என்று பெயர்பெற்றது. ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ள நந்தனபுரமென்னும் ஊரில், புரந்தரனென்னும் பிராமணோத்தமனது குமாரனாகிய மாதவனென்பவன், தன் மனைவியாகிய சந்திரரேகை என்பவளோடு பூஞ்சோலையிற் சென்று விளையாடிக்கொண்டிருக்கையில், மாலினி என்னும் சண்டாள கன்னிகையின் கட்டழகைக் கண்டு காமுற்று அவளோடு சேர்ந்து மனையாளைத் துறந்து, அப்புலை மங்கையுடனே சென்று, புலால் தின்றும் கள்ளைக்குடித்தும், கைப்பொருள் யாவையும் இழந்து பின்பு வழிமறித்தல், உயிர்கொலை முதலிய கொடுந்தொழில் புரிந்து பொருள்சேர்த்து, அவளுக்குக் கொடுத்துவந்து முடிவில் வறியவனாகிப் பல நோய்களையும் அடைந்து, அவளால் அகற்றப்பட்டவனாய், பல பாபமுந்தொடரப் பித்தன் போல அலைந்து திரிந்து, இத்திருமலையை அடைந்தமாத்திரத்தில், தனது தீவினையெல்லாம் சாம்பலாகப்பெற்று முன்னைய பிரமதேஜஸைப் பொருந்தி நல்லறிவுகொண்டு திருமாலை சேவித்து, வழிபட்டு பரமபதமடைந்தனனாதலால், இம்மலைக்கு "வேங்கடாசலம்" என்னும் பெயர் நிகழ்ந்தது, என்று வடமொழியில் பிரம்மாண்டபுராணத்திலும், பவிஷ்யோத்தரபுராணத்திலும் கூறப்பட்டிருக்கின்றன:

மேலும், "வேம்," என்பது அழிவின்மை. "கடம்" என்பது ஐசுவரியம். அழிவில்லாத ஐசுவரியங்களைத் தன்னை அடைந்தவர்களுக்குத் தருதலால், வேங்கடமெனப் பெயர்கொண்டது, என்று வராகபுராணத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

(3) இந்த திவ்விய க்ஷேத்திரத்தை, திருவேங்கடமாமலையென்றும், ஸ்ரீவேங்கடசைலமென்றும், நாராயணாத்திரியென்றும், சிம்ஹாத்ரி என்றும், சேஷாத்ரியென்றும, வடக்குமலை யென்றும், ஏழுமலையென்றும், அஞ்சனாத்ரியென்றும், ஸ்ரீவராககிரியென்றும், ஸ்ரீவேங்கடாத்ரி என்றும், சொல்லுவர் பெரியோர்.

## III.

திருவேங்கடமுடையானென ஸ்ரீனிவாசரது வைபவும் :—

மேலே கூறியுள்ளவை போன்ற மற்றும் வேறு அளவிறந்த அருமைகளும் பெருமைகளும் வாய்ந்த திருவேங்கடத் திருப்பதியில் நிவாஸமாகிருக்கும் ஸ்ரீனிவாசப்பெருமானென்றும், திருவேங்கடத்தான் என்றும், திருவேங்கடமுடையா னென்றும், திருவேங்

டநாராயணனென்றும், ஸ்ரீவெங்கடசைல ராட் நிவாஸ பரப்பிரமஹ் ஸ்வரூபனென்றும், ஸ்ரீகலௌ வேங்கடநாயக னென்றும், திருவேங்கடமுடையானென்றும், வடக்கு மலையானென்றும், ஏழுமலை கோவிந்தனென்றும், ஆந்திரதேசத்தவர்களால் எடுகொண்டலவாரு, அடுக்கடுக்கு தண்டாலவாரு, ஆபத்மொக்குலவாரு என்றும், கன்னட தேசபக்தர்களால் "திம்மப்பா" வென்றும், வடநாட்டு அன்பர்களால் "பாலாஜி" என்றும், மருமதிய அன்பர்களால் "ஜெம்மன் ஜெட்டி என்றும், இவைபோன்ற திருநாமங்களால், சதா பயபக்தி விசுவாசமாக, பல தேசபக்த ஜனங்களால் சங்கீர்த்தனஞ் செய்யப்பட்டு வருபவராகிய, ஸ்ரீவேங்கடேஸ்வர விராட் பகவானது வைபவங்களை, இம்மண்ணுலகத்தவர்களாலாவது, விண்ணுலகத்தவர்களாலாவது, மற்று எவ்வுலகத்தினர்களாலும் எடுத்துக்கூறும் தரத்தனவாயுள்ளதன்று. ஆயினும், பக்தஜன கோடிகளுக்கு, இவ்வைபவ விஷயமாய் ஒருவாற்றாலேனும் எடுத்து விளக்குவது, இங்கு அடியேனுடைய ஜீவ உஜ்ஜீவிய கடமையாதலால், முற்றுமுணர்ந்த ஞானிகளான பிரபன்னர்களின் திருவாக்கியங்களில் இரண்டொன்றை மாத்திரம் இங்கு உதகரிக்கிறேன்:

(1) பிரபன்ன ஜனகூடாக்ரேஸரரும், ஜன்மயோகியுமான நம்மாழ்வார், பின்வருமாறு திருவாய்மலர்ந்தருளுகின்றார்: அத்திவ்விய திருவாக்குகளாவன பின்வருமவைகளாம்:

"அகலகில்லேனிறையு மென்றலர்மேல் மங்கையுறைமார்பா" நிகரில்புகழாய், உலகு மூன்றுடையாய், என்னை யாள்வானே! நிகரில மார் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே! புகலொன்றில்லா அடியேனுன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று தீர்க்க சரணாகதி புரிந்து, "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னிவழுவிலாவடிமை செய்யவேண்டும். நாம் தெழிகுரலருவித் திருவேங்கடத் தெழில்கொள் சோதியெந்தை தந்தை தந்தைக்கே" என்று தாமும் தம்மவரும் காலதத்வமுள்ள பர்யந்தம் அடிமைத்திறஞ் செய்யவேண்டுமென் றறுதியிட்டதும் இத்திருவேங்கடத்தெந்தை விஷயத்திலேயன்றோ!

(2) ஸ்ரீராமாவதாரத்தில், ஆதிசேஷனானவர் ஸ்ரீஇராமபிரானுடைய (அநுஜன்) தம்பியாகிய ஸ்ரீஇலட்சுமண பெருமாளாய் திருவவதரித்தார்: இந்த இலட்சுமணனே, கலியுகத்தில் (இராம அநுஜன்) ஸ்ரீராமாநுஜனாய் அவதரித்து, "பிரஹ்மசூத்திரத்திற்கு" பாஷ்யம் செய்ததினால் ஸ்ரீபாஷ்யகாரரென்றும் திருநாமம்பெற்ற ஸ்ரீவைஷ்ணவமத ஜகத்குருவான ஸ்ரீராமாநுஜ சுவாமிகள், பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளுகின்றார்: இவரையே உடையவரென்று சொல்லப்படுவது.

அன்றியும் "பொன்னரங்க மென்னில் மயிலே பெருகு மிராமாநுஜன்" என்று அமுதனார் கொண்டாடலாம்படி, மஹாபி

நிவேசத்தோடு திருவரங்கத்திருப்பதியை யிருப்பாகப் பெற்றிருந்தும். அக்காலயிலேயே சாரீரகமீமாம்ஸையாகிய "ப்ரஹ்மஸூத்திர"த்திற்கு ஸ்ரீபாஷ்யஞ் செய்தருளுகையில் தடஸ்தனை ஸ்ரீரங்கேசனைவிட்டு, எதத்க்ரந்த அவிக்ன பரிஸமாப்தியின் பொருட்டு "அகிலபுவநஜந்மஸ்தே மபங்காதிலீலே விநதவிவிதபூத வ்ராதரக்ஷைக தீக்ஷேஸ்ருதி சிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவதுமம பரஸ்மிஞ்சேமுஷீபக்திரூபா" என்று ஸ்ரீராமாநுஜர் மங்களாசரணம் செய்வதற்கு விஷயபூதனாய் நின்றவனும் ஸ்ரீவேங்கடேசனேயாம்.

(3) இந்த திருவேங்கடத்தான் என்னும் ஸ்ரீனிவாசப் பெருமான் தொண்டமான சக்கரவர்த்திக்கும், ஆறுமுகக் கடவுளுக்கும் பிரத்தியட்சமாயிருக்கிறவர்.

(4) கொடியதிலும் மிகக்கொடிய கலியுகத்தில் ஜீவகோடிகளிடத்திலும், தேவகோஷ்டிகளிடத்திலும், கிருபாரசம் சுரந்து; திருவேங்கடத்தில் (திருமலை—திருப்பதி) ஸ்ரீனிவாசரென்றும் விராட்தேவபெருமானாய், திருக்கோயில் கொண்டெழுந்தருளி, "மயர்வற மதிநலம் பெற்ற" ஞானஸ்வரூபிகளாயிருக்கும் பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய இவர்களால் மங்களாஸாஸனம் செய்தருளப்பெற்று விளங்குகின்றாராயினும், இந்த திவ்விய க்ஷேத்திரமானது, அநாதிகாலமாக நிலைபெற்றுள்ள ஓர் திவ்விய தேவரகசிய க்ஷேத்திரமென்றும், பல யுகங்களை தனது தேவகால சக்கரத்தினால் நடத்திவைக்கும், தேவ ஆஸ்தானமென்னும், இதிலுரையும் ஸ்ரீனிவாசர் மஹாருஷிகளால் பிரதிஷ்டைசெய்யப்பெற்ற ஓர் திவ்விய மூர்த்தமென்றும், கைலையங்கிரியில் பொன்மய வில்வ மரத்தடியில் பார்வதியும்—பரமேஸ்வரனும், அம்மை—அப்பராய் வீற்றிருந்து, சித்தியோடு—முத்திபெற்ற * சரீரத்தோடு ஜீவன்முக்த கோஷ்டிகளுக்கு மாத்திரம் சேவை சாதித்துவரும் மஹா—ஜ்வாலா பலிஷ்ட மூர்த்திகாம்பெற்ற மூர்த்தம்போல், இத்திருவேங்கடநாதரும், இவ்விதமே ஜீவன்முக்தர்களுக்கு சேவைசாதிக்கும் ஓர் அதிமங்கள திவ்விய ஸ்வரூப பேசும் பெருமானாக தமது ஆஸ்தானத்தை திருவேங்கட க்ஷேத்திரத்தில் கொண்டிருப்பவரும், இவ்விதமான இத்திருவேங்கடமானது இந்த ஜீவன்முக்தர்களுக்கே சொந்தமான க்ஷேத்திரமாயும், இதில் உரையும் சுவாமியாகிய ஸ்ரீனிவாசர், திரிகரண சுத்திபெற்ற மனனுதீத சீலர்களான ஜீவன்முக்தர்களுக்கு சொந்தமான சுவாமியாயுமிருப்பதன்றியும், பலயுகங்கள் தவத்திலிருந்தவர்களும், இப்போதும் திருவேங்கடத்திலே நிஷ்டாபரரான தவசிரேஷ்டர்களாய் சமாதியுற்றிருக்குமவர்களுமான, ஸ்ரீகோரட்சநாதர் முதலிய மஹாருஷிகளால், ஆதியில் பிரதிஷ்டைசெய்யப்பெற்ற திவ்விய ஜீவன்முக்த க்ஷேத்திர மூர்த்தமாயிருந்தாலும்,

உலக மக்களின் பாபமலினங்கள் மேலிட்டு விட்சண்யம் கொண்ட கலிகாலத்தில், அதாவது கலியுகத்தின் பிரதமபாகமாகிய, 5000-த்தி சொச்ச வருஷங்கள் மாத்திரம், நாமாகிய உலக மக்களுக்கு திவ்விய சேவை சாதித்து, அநுக்கிரகிக்கும் திருவேங்கடத்தானாக விருந்தாலும், இக்கலியின் பாப விட்சண்யம் குறையும் காலத்தில், ஸ்ரீனிவாசனை இவ்வளவு சுலப்பத்தில் நாம் தரிசித்து சேவித்து உஜ்ஜீவியமடைய சாத்தியமாயிராதாகையால், நாமாகிய இந்தியர்களும், இப்பேருலகமக்களும், முன்ஜாக்கிரதையாயிருந்து சித்த—சமாஜ பிரசுரங்களில் தெரிவித்திருக்கிறபடி நமக்கு ஸ்ரீநிவாசரது—கிருபை சம்பந்தமாய் ஆகவேண்டிய சகல காரியங்களையும். சம்பூர்த்திசெய்துக் கொள்ள சர்வசித்தமாயிருக்கவேண்டியவர்களா யிருக்கின்றோம்.

(5) இந்தியர்களின் சாப விமோட்சனம் :—

5-9-1925 Saturday 9 p. m. "அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கல்லது பிறவாழிந்தலரிது" என்பதுபோல, தருமஸ்வரூபியாகிய பகவானை இவரது சுகுணமாகிய தர்மாநுஷ்டானத்தால் இவரை அடையுபொரு முக்கிய உபாயமாதலால், பலவேறுபட்ட தருமங்களை சிரமம்பாராது, அநுஷ்டிக்கும் சமர்த்துள்ள, பல வேறுஜாதி குல மதங்களாக வகுக்கப்பட்டிருக்கும், இந்தியர்களென்னும் பாரதகண்டவாசிகளின் சாபங்களை விமோட்சனம் செய்ய வேண்டியவரும் ஸ்ரீவேங்கடேசரேயாம்.

(6) பிராமணர்களின் சாபவிமோட்சனமும், ஸ்வராஜ்யமும் சர்வலோகராட்ய ஸ்வராஜ்யமும் :—

சாத்வீக தேவர் யாரென்று பரிட்சிக்குனிமித்தம் அக்கிரவர்ணத்தவரான பிராமணோத்தமர், செய்யத்தகாததும் யான் இங்கு அதை எழுதவும் இஷ்டப்படாத ஓர் அற்ப செய்யத்தகாத சோதனையை பூர்வத்தில் செய்து, ஸ்ரீலோகமாதாவாகிய ஸ்ரீலட்சுமிதேவியை, ஸ்ரீ லட்சுமிநாதராகிய ஸ்ரீமந்நாராயணரின் வட்சஸ்தலத்தி னின்றும் விலகச்செய்து, இதனால் ஸ்ரீலோகமாதாவின் கோபா கடாக்ஷிக்கு பிராமணர்களாகிய தங்களையும், இந்தியர்களையும் இப்பேருலகத்தையும் ஆளாக்கி அவதிப்படவைத்த தன்மியும், மகாமகிமைகள் பெற்றவர்களும், பூஜிதைக்குரிய உன்னத ஸ்திதிகளிலிருந் தவர்களும், மஹாருஷிகளின் புத்திரர்களும், இம்மஹனீயர்களின் வம்சத்தினர்களுமான இப்பிராமணர்கள், படிப்படியே கீழுக்கு நகர்ந்து, கேவல போக பாக்கிய அநித்திய சுகங்களுக்கு ஆசைப்பட்டு, இவைகளுக்கு ஏங்கியும் விஸ்கியும், தங்கள் மேலான வைதிக ஆசாரங்களையும், தபசுகளையும் அறவே விட்டொழித்து, கடைசியாக தங்களின் உதர போஷணத்தினிமித்தம் (வயிற்றுச்சோற்றினிமித்தம்) ஹீன ராஜ சேவைகளும் மனம் கூசாமல் செய்துவரும் சாபமும், மேலே குறிப்பிட்டவாறு, குலங்கெட்ட, ஆசாரங்கெட்ட, குணமுங்கெட்ட மாதவனென்னும் பிராமணன் பதிதபாவனம் அடைந்ததுபோல நீங்கப்

பெற்றும், இவர்களது பூர்வ உன்னத உரிமையாதிகளையும், உலக பூஜிதைகளையும், இந்திய ஸ்வராஜ்யத்தையும் ஸ்ரீவேங்கடேசரது சர்வ லோக ராட்ய ஸ்வராஜ்யத்தையும் பெற்று, இந்திய ஸ்வராஜ்யத்தை இந்தியர் வசம் ஒப்பிவைத்து இந்தியாவை "கோபரிபாலனமாதி" இந்திய ஸ்வதருமாசாரப்படி ஆளும்படிச் செய்து, இப்பேருலக க்ஷேமத்தினிமித்தம், இப்பிராம்மணர்கள், இவர்களின் பூர்வ உன்னத தபசுகளைச் செய்து, சுகமே உய்வதற்கு மூலகாரணமாயிருப்பது, ஸ்ரீனிவாசரது கிருபையைப்பெறுதல் ஒன்றேயல்லாமல், வேறொன்றுமில்லை யென்று உறுதியுடன, மனதுட்கொண்டு, ஸ்ரீனிவாசரது கிருபையைப்பெற சித்தசமாஜத்தார் தெரிவிக்கும், ஸ்ரீ வேங்கடேசரது சர்வலோக ராட்ய ஸ்வராஜிய நிமித்தம் நாம் அநுஷ்டிக்கவேண்டிய 45-வித சர்வோத்தம விதிகளின் வழி முயற்சிக்க வேண்டியவர்களா யிருக்கின்றார்கள்.

குறிப்பு :—அதிகமாக தெரிந்துக்கொள்ள விரும்புமவர்கள், சித்தசமாஜ பிரசுர நூல்களால் அறிந்துக் கொள்ளலாம்.

(1) நாம் ஸ்ரீவேங்கடேசப் பெருமானுடைய சர்வலோக ராட்ய ஸ்வராஜியம், இவரது தேவாபீஷ்டங்கள், இவரது தேவரகசியங்கள் இவரது பக்தர்களுக்கு தெரிவிக்கும் பலவித தேவரகசிய முன்னெச்சரிக்கைகள், ஆகிய இவைகளைப் பற்றிப் போதிக்கும் சித்த சமாஜ பிரசுரங்களான, முதலாவதாக,—5-வித தேவரகசிய களஞ்சிய முதல் நூல்களையும், இரண்டாவதாக,—"ஸ்ரீவேங்கடேசரது சர்வலோக ராட்ய ஸ்வராஜியமும் 45-வித சர்வோத்தம விதிகளும், என்னும் நூல் உள்பட,—"ஸ்ரீவேங்கடேச தேவரகசிய ஸ்ரீவிராட் தேவி ஸஹஸ்ர மாலிகா", என்னும் 1000 மகுடங்களுடைய 1000 வித தேவரகசிய நூல்களையும், படிப்பதாலும் படிப்பிப்பதாலும், கேட்பதாலும், இவ்விதமே நடந்து அநுபவிப்பதாலும் நாம் கிருதார்த்தர்களாவது மன்றி, மேலே "நம்மாழ்வார் பெருமாண்" நமக்கு திவ்வியாக்ஞை யிட்டருளியபடி,—தாமும் தம்மவரும் காலதத்துவமுள்ள பரியந்தம் இத்திருவேங்கடத் தந்தையாகிய ஸ்ரீனிவாசருக்கு அடிமைத் திறம் செய்யவேண்டுமென்று, உறுதி மொழியிட்டதிருவாககியங்களை சிரசாவகித்து, அவ்விதமே ஒழுகி, ஆழ்வார் அவர்களது திவ்வியாநுக்கிரகத்தையும், ஸ்ரீனிவாசரது பேரருளையும் நமக்கு சொந்தமாக்கிக் கொண்டவர்களாவோ மென்றும், அதிவினயமாய் தேவரீர்களாகிய அன்பர்கள் வீற்றிருக்கும் திக்குகள் நோக்கி மனப்பூர்த்தியான சாஷ்டாங்க நமஸ்காரங்கள் செய்கின்றனன்.

இங்ஙனம் :

5—9—1925
சென்னை.
Madras.

தேவரீர்களின் கடாக்ஷங்களை எதிர்பார்க்கும்
தாஸாநுதாஸனும்
ஸ்ரீவேங்கடேச தேவஸ்தான தெய்வாபீஷ்ட
அடிமையுமான
"தேவபால-சுப்பரஸ தீனய ளசாது"

ஓம்.

சரீரத்ரைய ஜீவன்முக்தர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீவேங்கடசைல நாட்நிவாஸ பரப்பிரஹ்மணேநம:

---


சித்த சமாஜ பிரசுரங்கள் — The Siddha Samaj Series

ஸ்வதேவ பிரயத்தினம் — Swedeva Movement

தேவரகசிய ஸ்ரீவிராட்தேவி ஸஹஸ்ரமாலிகா இல. 300 (சில்லரை.)

The Divine Secrecies in 1000 Strnigs to Sri Veerat Devi

No. 300 (& odd.)


வந்தே—தேவ—மாதரம்.

# ஸ்ரீவேங்கடேசரது சர்வலோகராட்ய ஸ்வராஜ்யமும்

(இவரது திவ்வியாநுக்கிரக நிமித்தம் நாம் அநுஷ்டிக்க வேண்டிய)

# 45-வித சர்வோத்தம விதிகளும்.

---

## The Sarva Loka Rodya Sweraj of Sri Venkatesa

and

## The 45-Sorts of Sarvothama Endeavours.

---

இந்நூலில் அடங்கியுள்ள விஷயங்கள் :—

ஸ்ரீவேங்கடேச * அபிஷ்டங்கள், இவரது அநுக்கிரகசாதனங்கள், இவருக்கு சர்வ லோகராட்ய ஸ்வராஜிய காணிக்கை சமர்ப்பித்தலுக்கு சம்முக்கிய கடமைகளான, 45-வித சர்வோத்தம விதிகள்.

(1910ஆு பெப்ரவரிமீ 6உ தெரிவிக்கும் தேவரகசிய சுருக்கமானவை)

1. ஸ்ரீவேங்கடேசர் குபேரனுக்கு கொடுக்க வேண்டியதாக ஏற்பட்டிருக்க கடன் ஸ்ரீனிவாசரின் கிருபையை சகாய ஏதுவாகக் கொண்டு (ஸ்ரீவேங்கடேசவ பீஷ்ட—ஜீவன்முக்தப்ரோட்ச—சத்திய காலோதய ஞானபோதகவிஷயமாய் முயற்சிக்கும்) சித்தசமாஜத்தா

---

* அபீஷ்டங்கள்—அதிக இஷ்டமானவைகள், மிகு பிரியமானவைகள்; இது வடமொழி, இதற்கு எதிர்மொழி அனிஷ்டம்.

* 1910ஆு பேப்ர்வரிமீ 6உ, என்று இங்கு குறிப்பிட்டிருப்பது "ஸ்ரீவேங்கடேசரது சர்வலோகராட்ய ஸ்வராஜயமும், இவரது திவ்யாநுக்கிரகங்களை நமக்கு சொந்தமாக்கிக்கொள்ளுவதினிமித்தம், நாம அநுஷ்டிக்கவேண்டிய 45 வித சர்வோத்தம விதிகளும்," என்னும் மகுடமுடைய இந்நூலை, பெரியவர்களின் அருள்துணை உதவியினால் ஆக்கப்பட்ட காலமாகும். ஆனால் இந்நூலை அச்சிட்டுப பிரசுரிக்கும் காலமோ, 1925ஆு செப்டம்பர் மாதமாகும்.

ரின் விடாமுயற்சியால் * தீர்த்துவிட்டபடியால், இனிமேலும் ஸ்ரீ வேங்கடேசருக்கு கிட்டிப்பூட்டிடும் ஐதீகத்தை நடத்தலாகாதென்றும், அல்லது குபேரனுக்கு கௌரவத்தைக் கொடுக்கும், இதுபோன்ற வேறு எவ்வித ஐதீகத்தையும் நடத்தலாகாதென்றும், அறிந்து இவ்விதமே ஒழுகுதல்:

2. 27-2-1919-3-30 P. M. சித்த சமாஜத்தாரால் அந்தந்த தேவிகளின் குறைகளும், அபீஷ்டங்களும், இன்னின்னவைகளென்று பரமசூட்சுமதரிசனார்த்தமாக உணர்ந்தறிந்தும், இவ்விதம் அறிந்தவைகளுக்கேற்றவாறு, அந்தந்த தேவாலயங்களிலுள்ள தேவிகளுடைய மூர்த்தங்களின் மூர்த்திகரங்களை சித்விலாசஜனித புண்ணியங்களால் பலிஷ்டம், மஹாபலிஷ்டம், ஜ்வாலாபலிஷ்டம், மஹாஜ்வாலாபலிஷ்டம் முதலிய மூர்த்திகர தேவரகசிய விதிப்படி சரிவர நிறைவேற்றி அந்தந்ததேவிகளின் தேவானுக்கிரகங்களை சுரப்பித்து பிரவாகிக்கச்செய்திருப்பதால், இவ்வித தேவாலயங்கள் யாவும், இவைமக்களுக்கு அவற்றின் தேவானுக்கிரக திருவருள் துணைகள் புரியும் விஷயத்தில், சித்தசமாஜத்திற் குட்பட்டிருப்பதால், பாரதகண்டத்திற்கும், இப்பேருலகத்திற்கும், இனியும் புதிய புதிய அல்லல்களாதிகளுண்டாவதற்கு காரணமாயிருக்கும், ஸ்ரீவேங்கடேசப் பெருமானுக்கு, கிட்டிப்பூட்டிடுதலாதி மிருகவண்மையானதும், அவைதிகமானதும், அசுரப்பிரீதியானதும், பைசாசேய மயமானதுமான செய்கைகளை செய்தலாதிகளை, கணப்பொழுதும் இந்த தேவிமார்கள் பார்க்கவும் (கேட்கவும்) சகியாதவர்களாதலால், சித்தசமாஜத்தாரின் வேண்டுகோளை மறுத்து எம்பெருமானுக்கு கிட்டிப்பூட்டிடுதலாதிகளைச் செய்யுமவர்கள், ஸ்ரீகுளூர் விராட்தேவி, ஸ்ரீகங்காதேவி முதலிய ஸ்ரீசக்திதேவிகளால் தண்டிப்பித்திடலுக்கு காரணமாவரென்று அறிந்து, இவ்விதம்செய்தலையும், செய்வித்தலையும், இவைகளுக்கு உடந்தையாயிருக்குமவர்களையும் முற்றும் விட்டொழித்து, ஸ்ரீசக்திதேவிகளின் கோபாவேசங்கள் வந்து அடுக்காமலிருப்பதற்கும், ஸ்ரீவேங்கடேசப்பெருமானுடைய திவ்யானுக்கிரகத்திற்கு பாத்திரராவதற்கும் நாமாகிய உலகமக்கள் தக்கபடி ஒழுகுதல்.

3. கணக்கற்ற பிதுர்க்கள் திருவேங்கடத்தில் * உரிதண்டவேதனைகள் அநுபவித்து வருவதால், இப்பிதுர்க்களை இவ்வேதனைகளினின்றும் விடுவித்தல்.

4. ஸ்ரீ வேங்கடேசர் வெகுகாலமாய் தளிகையாதிகளை அம்சைசெய்யாமலிருப்பதை நிவர்த்தித்தல்.

5. ஸ்ரீவேங்கடேசாதி சகல தேவர்களுக்கும் அபீஷ்டமான கோபரிபாலனம் அதாவது பசுக்காத்தல் என்று சொல்லப்படுகிற கோசம்ரட்சண தர்மானுஷ்டானத்தை ஊர்ஜிதப்படுத்தல்.

6. ஸ்ரீகலோ வேங்கடநாயகருக்கு, இவரது சர்வலோகாட்ய ஸ்வராஜ்யத்தைக் கொடுத்து, நாம் சாம்பிராஜ்யத்தைப் பெற்றநுபவித்தல்.

7. ஸ்ரீவேங்கடேசர் தளிகையாதிகளை அம்மைசெய்யு ளிமித்தம் (கோ) பசுநிறைகளையும், காராம்பசுநிறைகளையும் சேகரித்தல்.

8. கோடி கோபாலகுமார வீரவர்க்கங்களுடன் (நெல்லூர் ஜில்லா வடபாலார் நதிதீரத்தில்) எர்றகெட்டபாடு என்றும் க்ஷேத்திரத்தில் வீரசமாதியிலிருக்கும், ஸ்ரீகரியாவுலராஜா, ஸ்ரீநாராயணம்ஸ காட்டம் மகாராஜா ஆகிய இவர்களின் (1) அபீஷ்டங்களும் (2) பகிர்முக திருஷ்டிபெறவிருக்கும் இவரது வீரஜீவன் முக்தநிலைய சூட்சுமதேக தேவாம்ஸ வீரர்களின் ஹாவாஹனங்கள் (3) அவதாரங்கள் ஆகிய அதிஅவசர அபீஷ்டங்களும் நிறைவேறுவதற்கு சாதனமாகிய காராம்பசுநிறையையும், பசு இனங்களையும் சேகரித்தல் முதலிய சகலவித காரியங்களுக்கும் அநுகூலமாகயிருத்தலும், அநுஷ்டித்தலும் ஆகிய காரியஙகள்.

9. ஸ்ரீ அகத்தியர் ஸ்ரீவியாஸர் ஸ்ரீயாக்ஞவல்கியர் முதலிய சரீரத்திரைய ஜீவன்முக்தர்களின் அதிஅவசர திவ்வியாக்ஞா வபீஷ்டங்கள் யாவையும் சிந்தாமல் சிதராம்ல் சிரஸாவகித்து பரிபாலித்து நிறைவேற்றுதல்.

10. 1-3-1910-6-30 A. M. சித்தசமாஜபோதங்களாகிய ஏகாதச (11) தருமவிரோதங்களான விலக்குகளென்றும் அனிஷ்டங்களைச் செய்யாமலிருத்தலும், சாதுர்தச (14) வித தெய்வாபீஷ்டமான விதிகளை அநுசரித்தலுமான அநுஷ்டானங்களைச் செய்தலும்.

11. ஸ்ரீசக்திதேவி மூர்த்தங்களை ஸ்ரீவேஙகடேசவபீஷ்டப்படி வழிபாடுகள் செய்தலும், இதர பல வேறுபட்ட தேவமூர்த்தங்களை ஸ்ரீவேங்கடேச வபீஷ்டப்படியும் ஜீவன்முக்தராதியர்களின் ஆக்ஞைப்படியும் அநுசரித்தொழுகி 'சமரச சன்மார்க்க சித்தாந்தத்தை' பரவச்செய்தல்.

12. 'ஸ்ரீவேஙகடேச தேவரகசிய சித்தாந்தஉண்மை' (முதல் பாகம்) என்னும் ஸ்ரீவேங்கடேச-அபராத —க்ஷமாபண கிரந்தத்தின் 6-ம் அத்தியாயத்தில், இப்பெரிய உலகத்தின் பலகோடி ஜீவர்களின் மஹா அபராதங்க்ளினிமித்தம் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுக்கு சமர்ப்பிக்கும்படி, விண்ணப்பித்திருக்கும், விதவிதமான விசித்திர விநோத தேவப்பிரீதியான ஸ்ரீபாதகாணிக்கை பிரார்த்தனைகள் யாவையும் காணிக்கைக்குரியவர்கள் செலுத்துதலும், மற்றவர்கள் செலுத்துவதற் கேதுவான ஆணைகள் யாவும் இப்பிரார்த்தனைக்காரர்களுக்குப் புரிதலுமான காரியங்களைச்செய்தல்.

13. நம்மாட்சிமைதங்கிய மகாராஜா 7-வது எட்வர்ட் சக்கரவர்த்தி அவர்களின், இந்திய சக்ராதிபத்திய மகுடதாரணநிமித்தம்

ஸ்ரீவேங்கடேச விராட்பகவானுக்கு ஸ்ரீ பாதகாணிக்கைகளாய் செலுத்தப்பட வேண்டிய (முதலாவதாக,) —16-லட்ச சொச்சரூபாய்களும், இதற்கு இதுவரை சேரவேண்டிய வட்டித்தொகையுமான தனமயமான ஸ்ரீபாதகாணிக்கையும், (இரண்டாவதாக),—ஸ்ரீவேங்கடேசர் முதலாயுள்ள சர்வதேவர்களுக்கும், தேவிகளுக்கும் பிரீதியான கோபரிபாலனம்—கோதருமபரிபாலனம் ஆகிய கோசம் ரட்சணமாதி சம்பந்தவருங்கால ஆளுகையான தருமாநுஷ்டான காணிக்கையும், ஆகிய இவ்விருவித (2) காணிக்கைகளையும் நம் காருண்ய பிரிட்டிஷ் மகுடவர்த்தனம் ஆலசியமில்லாமல் செலுத்த கடமைப்பட்டு அவசரப்படுதல்.

14. பரத கண்டத்தவர்களும் இப்பெரிய உலகத்தவர்களும் அபாயம் பீதி அராஜிகம்முதலிய வெம்பலங்களின் பிரபாவங்களினின்றும் தப்பும் வழிகளுக்கேதுவாய், (முதலாவதாக) தேவரகசிய சித்தாந்த உண்மை (The Truth of Divine secrecy Vol 1.) என்னும், ஸ்ரீவேங்கடேசவபராத க்ஷமாபண நூலிலும், (இரண்டாவதாக) தேவரகசிய (ஸ்ரீரூலூர்) விராட் தேவி ஸஹஸ்ரநாமாவிகா (1000) என்னும் நூலின் இலக்கங்களிலும், சித்தசமாஜ போதங்களாகவும், ஸ்ரீவெங்கடேசவபீஷ்ட ஜீவன்முக்த ப்ரோட்ச சத்திய காலோதய ஞானசித்தாந்தமாகவும், அறிவிக்கப்பட்டிருக்கும் தீர்க்கதரிசன முன்னெச்சரிக்கைகளின் வழி ஒழுகி ஸ்ரீனிவாசரது அபீஷ்ட வநுக்கிரஹங்களைப்பெற முயலுதல்.

15. ஸ்ரீகலோ வேங்கடநாயகராகிய ஸ்ரீனிவாசருடைய அபீஷ்டங்களை அநுசரித்து யாதோ (தேவ) ரகசிய காரியங்கள் திருவேங்கடத் திருப்பதியில் சீக்கிரத்தில் நிறைவேறுவதாக உணரப்படுகிறதால், ஸ்ரீவேங்கடேச பகவானுக்கு அவரவர்களின் ஆபத்துச் சம்பவங்களின்போது, அவரவர்கள் பிரார்த்தித்துக்கொண்ட அபராத காணிக்கைகளை ஆலசியமில்லாமல் செலுத்தல்.

16. 3-3-1910-11 A. M. திருவேங்கடத்திருப்பதியில் ஸ்ரீவேங்கடேசருக்கு அதிப்பிரியமான திருவாராதனமாகிய அமிர்தபான கைங்கரியவிஷயம்:- ஸ்ரீவேங்கடேசருக்கு அபீஷ்டமானதும், இவரது திருவாராதனங்களுக்கேற்றதும், பக்தஜனங்களுக்கு 'சர்வரோகஹரகாயகல்ப-ஞானசாதன-அமிர்தபான' வினயோகமாகவுமுள்ள கைங்கரியத்திற்கு மூலதனமீட்டல்.

(இரண்டாவது):—இக்கைங்கரியத்தை நிறைவேற்றுவிப்பித்தம் திருமலையில ஜீவமூலிகைகள் முதலிய அரிய சித்தாதி மூலிகா சாமக்கிரிகைகள் சேகரித்தல்.

(மூன்றாவது): — இக்கைங்கரிய விஷயமாய் ஸ்ரீவேங்கடேசவபராத க்ஷமாபணநூலில் விண்ணப்பித்திருக்கும் நியமன

சதாம்ஸம் (நூற்றிலொன்றாகவும்), ஸஹஸ்ராம்ஸம் (ஆயிரத்தி லொன்றாகவும்,) ஸ்ரீவேங்கடேசர் தம் சொந்த உபயோகத்திற்காக ஏற்றுக்கொள்ளுவார். பயபக்திவிசுவாசமின்றியும், தருமவிரோதமாயும் ஈட்டப்படும்பொருள் முதலியவைகள், இதுகாலம்வரை ஓர் வழியில் ஓர்விதத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டு வந்தவாறு, ஸ்ரீனிவாசருக்கு இனியும் எவ்விதத்திலும் உடன்பாடாகயிருக்க ஏதுவாகாதென்றும் அறிந்து இதற்குத்தக்கபடி ஒழுகுதல்.

19. ஆனால் உலகத்தில் செல்லாதவைகளை செல்லும்படிசெய்யும் பகவானென்று திருநாமம்பெற்ற ஸ்ரீவேங்கடேசப்பெருமான், வழக்கம்போலவே மேலே சொல்லியிருக்கும் நிபந்தனைகளுக்கு அபிஷ்டமுடையவராயிருத்தலாலும், அநீதர்களின் பலாத்கார சொத்துக்களையும், சரீரமுனேசம்பந்தமான தரும விருத்தமுயற்சிகளையும், அங்கீகரியாராதலாலும், பக்தஜனங்கள் உண்மைக்கு உத்தாரமாய்ச் செய்யும் முயற்சிகளும், தருமவிருத்தமின்றி ஈட்டும்பொருள்களும் (உலகத்தில் ஒருக்கால் செல்லாவிட்டாலும்) பகவான் ஸ்ரீவேங்கடேசர் தமது கிருபாரச மேலீட்டால், தாம் தமது கணக்கில் செல்லுவைத்துக்கொள்ளவும், திருவுள்ளமுவக்கப் பெறுவரென்றறிந்து, இதற்குத்தக்கபடி அதர்மங்களை ஒழித்து தெய்வப்பிரீதிக்கு சாதனமான தருமகாரியங்களில் ஒழுகுதல்.

20, ஸ்ரீவேங்கடேசபகவானுக்கு ஸ்வராஜ்யாதி காணிக்கை ஸமர்ப்பிக்குனிமித்தம், பாதகண்டத்தவர்களான இந்தியர்முதல் பேருலகத்தவர்களான சர்வதேச சர்வமதஜனங்களான நாம், சர்வோத்தமவிதிகளின் வழிமுயலுதல்:—சர்வதேவர்களுக்கும் அபிஷ்டமான தேவரகசிய காரியமாயுள்ளது, ஸ்ரீவேங்கடேசப் பெருமானுக்கு, ஸ்வராஜ்ய பட்டாபிஷேக காணிக்கையை சமர்ப்பிக்கும் விஷயமாம்: இவ்வித ஸ்வராஜ்ய பட்டாபிஷேகத்தை ஸ்ரீவேங்கடேசபகவானுக்கு காணிக்கையாக சமர்ப்பிக்கும் விஷயமாய், இரத்தம்சிந்துதல் கண்ணீர் சிந்துதல, மோசம்-பொய்-களவு-இம்சை-துக்கம் கொலைமுதலிய துர்சம்பவகாரியங்களும், இவற்றின்பலன்களும் பகவானுக்கு ஏற்கவே ஏற்காது. ஆனால் என்றும் மனம்மிகப்பொறுத்து சாந்தமாயும் சத்தியமாயும் ஒருபொட்டு இரத்தமாவது கண்ணீராவது சிந்தாமலும், சிந்தப்படக்கருதாமலும், ஸ்ரீவேங்கடேசருக்கு, இந்திய ஸ்வராஜிய மும் சர்வலோகராட்ய ஸ்வராஜிய காணிக்கையையும் சமர்ப்பிக்க முயற்சிக்க வேண்டுமவர்களாயிருக்கின்றோமென்றறிந்து, இதற்கு வேண்டிய இவ்வித சர்வோத்தமவிதிகளை சர்வவிதத்திலும், தளராமல் அநுஷ்டிக்க. முயல ஆயத்தப்படுதல்.

21. ஒருபொட்டு இரத்தமாவது, ஒருபொட்டு கண்ணீராவது, சிந்தப்படாமலும், சிந்தப்படக்கருதாமலும், சித்தசமாஜ பிரசாநூல்களில், தெரிவித்திருக்கிறபடி அபாயங்களை விளைவிக்காதன

வும் ஜெயத்தைக் கொடுப்பனவுமான, *51-வித ஸ்வதேவ முயற்சிகளின் வழிநின்றும், பின்னால் அவரவர்கள் அடையவேண்டிய தேவாநுக்கிரக திருவருள் துணைகளான சர்வசாம்பிராஜ்யத்தினிமித்தம் ஸ்ரீகலோவேகங்டநாயகர், தமது சர்வலோக ராட்யஸ்வராஜ்ய ஆளுகையில், அவ்வத்தேசங்களை சேர்த்துக்கொள்ள *திருவுள்ளமுவக்கும் வண்ணம், இந்திய ஆளப்படுமவர்களும், இதுபோலவே சகலதேச பிரஜைகளான ஆளப்படுமவர்களும்முயன்று தங்கள் தங்கள் போலிஅல்லாததும் உண்மையானதுமான ஸ்வராஜ்யங்களை பெற அங்கீகரித்தல்.

22. அசுரப்பிரீதியானதும், பின்முறையே அடுத்தடுத்துபல துன்பங்களை கொடுத்துவர காரணமாயிருக்கும், அசுராஹாவாஹன முயற்சிகளாயிருக்கும் இரத்தம் சிந்தப்படுதல், கண்ணீர் சிந்தப்படுதல் ஆகிய இவைகளை முற்றுமொழித்து, ஸ்வராஜ்யம்பெற திறமையில்லாதவர்கள், தங்களுக்கு அவ்விதவே (இரத்தம் கண்ணீர் சிந்தப்படாமல்) ஸ்வராஜ்ய பலிதத்தை ஜெயம்செய்து கொடுக்கு மலர்களின் துணைவலிமையை எதிர்பார்த்து பொறுமையுடன் தக்க தேவாநுக்கிரக சாதனகாரியங்களில் முயலுதலை அங்கீகரித்தல்.

23. சர்வதேசம் சர்வமதகுல வாசாரமக்களின் பாபங்களைப் போக்குபவரென்று பதப்பொருளுடைய திருநாமம்வகித்த ஸ்ரீவேங்கடேசபகவான், தாம்பூர்வம் கொடுத்திருக்கும் திருவாக்குப்படி, இந்தியர்முதல் இவ்வுலகமக்களையும் கோவினங்களையும் சம்ரட்சிக்குணிமித்தம், இந்தியாவில் சிம்மாசனம் வீற்றிருந்து, சர்வலோக ராட்யராய் சர்வலோகத்தையும் ஆளுவாராதலால், * அசுரமயஸ்வதேசியமுகலிய வழிகளை யொழித்து, தேவப்பிரீதியான ஸ்வதேவ வழிகளில், இந்தியர்களும், இதுபோலவே, சர்வதேசத்தவர்களும் முயலுதல்.

---

51-வித ஸ்வதேவ முயற்சிகள்:—இவைகளின் விபரங்களை தேவரகசிய சித்தாந்த உண்மை பாகம் 5- (The Truth of Divine Secrecy Vol 5) என்னும் நூலின், 77-வது பக்கத்தில் பார்க்கவும்.

* அசுரமயஸ்வதேசியம்—இப்பதமானது, ஸ்வராஜியத்தை அடைய அல்லது தேசநன்மையை அடைய, காங்கிரஸார் முன்பு கடைப்பிடித்தொழுகிவந்த (The Active Resistances) சாந்தமில்லாததும், இம்சையும் இரத்தம் சிந்தலுமான எதிர்க்கும் சுதேசியமுயற்சியை குறிப்பிடுகிறது. இது விஷயமாய் பின் நேர்வதான சம்பவங்கள் முதலிய சித்தசமாஜ மஹரிஷியார்களின் உறுதிமொழிகளடங்கிய இரண்டு கடிதங்கள், ஸ்ரீமான்—பாபு பீபின் சந்திரபாலர் அவர்களுக்கு, இவர் முதல்முதலாக சென்னைக் கடற்கரையில் சுதேசிய விஷயமாய் உபந்நியாசம் செய்ய (1907 வருஷத்தில் வந்தபோது அனுப்பியிருக்கிறது. இக்கடிதத்தில் இது விஷயமான விஷயங்களை அறிந்துக் கொள்ளலாம்.

24. இந்திய ஆளுவோரும் ஆளப்படுவோரும், ஸ்ரீ வேங்கடேசருக்கு அபீஷ்டமான *17-வித காரியங்களையும், இவரது, அதி அவசர அத்தியாவசியங்களான *11-வித காரியங்களையும், இவரது *25-வித தேவாரகசியங்களையும் பூர்த்தி செய்தல்.

25. இப்படி மேலே கண்டவாறு பூர்த்திசெய்து, இந்திய *பூமிப்பிரதேச முழுவதிலும் நடந்துவரும், இந்து தெய்வங்களின் அழுகுரல் புலம்பல்களையும் நிறுத்துதல்.

26. மேலே சொல்லியவாறு இந்துதெய்வங்களின் அழுகுரல் புலம்பலாதி துக்க குறைபாடுகளை நிறுத்தி தெய்வகோப காரணமாக ஜனித்து, இந்தியபிரதேசத்திலும், இந்தப்பெரிய உலகமுழுதிலும், அதிதீவிரமாய் மேன்மேலும் பரவிவரும் அசத்தியகால வெம்பலவக்கினியின் காரியங்களான அபாயம்-பீதி-அராஜிகமாதிகளை சாந்தப்படுத்தல், அல்லது நசுக்கி துடைத்தெறிதல்.

27. ஸ்ரீவேங்கடேச பகவானுடைய திருவவதாரம், இவரது சர்வலோக ராட்யஸ்வாராஜியம் முதலிய மேலே தெரிவித்திருக்கும் சித்தசமாஜ மஹனீயர்களுடைய திவ்வியாக்ஞைகள், ஆகிய இவைகளை மறுக்குமவர்கள் எவர்களும் இந்தியாவிலும், இப்பெரிய உலகத்திலும் இல்லவே யில்லையென்றும், ஒருக்கால் மீறி மறுப்பவர்கள் ஏற்பட்டாலும் அவர்கள், ஸ்ரீ வேங்கடேசருடைய திருஅருள் ஆணைகளுக்கு எதிர்பார்க்க வேண்டுமென்பதை அறிந்துகொள்ளுதலும், அவர்கள் செய்யும் மானுஷீக கருமங்களனைத்தும், அவர்களின் புண்ணியக்களஞ்சியக் கணக்கில் செல்லுமென்பதைத் [illegible] வேண்டுமென்றும் அறிதல்.

---

*ஸ்ரீவேங்கடேசருக்கு அபீஷ்டமான 17-வித காரியங்கள்.—இந்த 17-வித காரியங்களில், 11-வித காரியங்கள் இப்பின்னவையென்று "தேவாரகசிய சித்தாந்த உண்மை—பாகம்-5" (The Truth of Divine-Secrecy-Vol 5) 93-பக்கத்தில் தெரிவித்திருக்கிறது; மற்ற 6-வித அபீஷ்டகாரியங்களின் விஷயங்களை, சித்தசமாஜ பிரசுரங்களாகிய "தேவரகசிய-தேவி ஸம்வாத மாலிகை" இலக்கங்களில் பார்க்கவும்.

* ஸ்ரீவேங்கடேசரது அதி அவசர அத்தியாவசியமான 11-வித காரியங்கள்.— (The eleven urgent wants of Sri Venkatesa) இவற்றில் சில, மேலே தெரிவித்த 17 வித அபீஷ்டங்களில் அடங்கும்: இதனிடையாய் சித்தசமாஜத்தாருக்கும் [illegible] நீண்டகாலம் [illegible] பலகட்டங்கள் [illegible] செய்யப்பட்டு, கடைசியாக [illegible] இவரது தேவஆண்டவர [illegible] (19) பத்தொன்பது நாட்கள் [illegible] (விருத்தை) வாதப்பட்டு [illegible], முதலில் [illegible] மறுத்து [illegible], கடைசியில் [illegible] விரோதமின்றி, சர்வசம்மதமாய் அங்கீகரித்து, [illegible] சத்தியவந்தர். இருதயத்திலும் சத்தியவந்தர்" (The Sadhu is Sincere and Sincere in heart) என்று தங்கள் முடிவுரையையும் [illegible] கூறவும் கடமைப்பட வேண்டியவர்களானார்கள். (இதன் தொடர்பை 18-ம் பக்கத்தில் [illegible])

28. (முதலாவதாக)— ஸ்ரீவேங்கடேசருக்கு கொடுக்கவேண்டிய பணக்கடனுக்காகவும், (இரண்டாவதாக),—இந்திய ஸ்வதருமக் கடனுக்காகவும், மஹாபிரிட்டானிய மகுடமும், பிரிட்டிஷ் அரசர்கள் முதலிய ஆளுவோர்களும், ஸ்ரீவேங்கடேசருக்கு இந்திய ஸ்வராஜியத்தைக் கொடுத்து, இப்போது இந்தியப் பிரதேசத்தில், அதிசீக்கிரமாய் பரவி விருத்தியாகிவரும், அசத்தியகால வெம்பலவக்கினியின் காரியங்களான, அபாயம்—பீதி முதலிய துக்கசம்பவங்களை வேருடன்பிடுங்கி முற்றும் ஒழிக்கவாவது, சாந்திகரிப்பதற்காகவாவது, வேண்டிய தேவாநுக்கிரகங்களையும், மஹாபிரிட்டானியருடைய சூரியபகவான் ஒருபோதும் அஸ்தமிக்காத ஏகாதிபத்தியத்தின் சுதந்தரங்களை பாதுகாத்துக்கொள்ளுநிமித்தம், வேண்டிய தேவாநுக்கிரகங்களையும் பெறுதல்,

விசேஷக் குறிப்பு :— முதலாவதான ஸ்ரீபாதகாணிக்கையானது, (16) பதினாறு லட்ச சொச்சரூபாய்களும், இதற்குண்டான வட்டியும் சேர்ந்த மொத்த தொகையாம்.

இரண்டாவதான ஸ்வதரும கடனாவது,—முதல் அம்ஸமாக பிருதிவிமய ஸ்தூல இந்தியாவும், சூட்சும மய தேவாம்ஸ இந்தியாவும் சுக்ஷேமமாயிருப்பதற்கு, பிராணாதாரமாயிருந்தனவும், இருக்கிறதாகவுமான பெரியனவும் சிறியனவுமான கட்டளைகளும், தருமங்களும், ஆசார வநுஷ்டானங்களும், அஜாக்கிரதையினால் அநுஷ்டிக்கப்படாமையாலும், இவைகளைக்கொன்று விட்டபடியாலும் நேர்ந்தவைகளாம்.

இரண்டாவது அம்ஸமாக:—பிரதிவருஷத்திலும் நூறாயிரத்திற்கு மேற்பட்ட பசுக்களை இந்தியப்பிரதேசத்தில் * கண்டனஞ்செய்வதால் நேர்ந்தனவும் நேர்வனவும், நேரவிருப்பனவுமான வெம்பலங்கள்.

குறிப்பு:—இவை விஷயமான விபரங்களை (முதலாவதாக)— தேவரகசிய சித்தாந்த உண்மை, 1-ம் பாகம் (The Truth of Divine Secrecy Vol I.) என்னும் நூலின் 97-102-190, இவைமுதலிய பக்கங்களிலும்,

இரண்டாவதாக) :—இந்தியர்களின் பிரதான கவர்ன்மெண்டுக்கும் (The Imperial Govt.) மாகாண கவர்ன்மெண்டுக்கும் (Local Govt.) தெரிவித்திருக்கும் முன்னெச்சரிக்கைகளடங்கிய பல மநுக்களாலும்,

மூன்றாவதாக) ,— இந்திய மாஜிமந்திரி கனம் மாண்டேகு அவர்களுக்கு (The Rt. Honorable E. S. Montagu) முறையே 21-2-1917, 22-12-1917 தேதிகளிட்ட 529-வது, 530-வது இலக்கங்களுடைய மநுக்களாலும் அறியலாம்.

---

* கண்டனம்—கொல்லப்படுதல்.

29. ஐரோப்பா கண்டத்திலுள்ள ஜெர்மானிய தேசத்தின் மஹாமாட்சிமைதங்கிய கேஸர் சக்கரவர்த்தியும் இவரது, குடிகளான ஜெர்மானியரும், திருப்பதி-ஸ்ரீவேங்கடேச விராட் கோவிந்தசுவாமி அவர்களுக்கு, அவர்களின் பூர்வீகமான தனக்கடனையும், தருமக் கடனையும் அதிஅவசரமாய் செலுத்துதல். இப்படி அதிஅவசரமாய் ஸ்ரீவேங்கடேசருக்கு செலுத்தி, கேஸர் சக்கரவர்த்தியுடையவும், இவரது ராஜகுடும்பம், இவரது அரசு, இவரதுகுடிகளின் பாதுகாப் பானரட்சைக்கும், க்ஷேமலாபங்களுக்கும் வேண்டிய தேவாநுக்கிரகங்களைப்பெறுதல்.

குறிப்பு:—இந்தக்கடன்களை செலுத்திவிடும்படி, தேவரகசிய சித்தாந்த உண்மை. (முதல்பாகம்) என்னும் நூலின், 163-முதல் 169-பக்கங்கள் வாயிலாக பிரசுரிக்கப்பட்டும், பகிரங்கமாய் தெரிவிக்கப்பட்டும், ஷை கடன்காணிக்கைகள் அநாவசியமாயும் அஜாக்கிர

---

( 16-வது பக்கத்தின் தொடர்ச்சி )

இந்த வினாவிடைரூபமான சம்வாதவிஷயங்களைச்சுருக்கி, எழுதிய ஒரு மனுவும் விசாரணைகர்த்தாவாயிருந்தவரிடத்தில் ஒப்பிக்கப்பட்டிருக்கிறது. 10-நாட்களில் பதில்அளிக்கிறோம். கட்டாயமாக நீங்கள் சென்னையிலிருந்து இங்கு வரவேண்டுமென்று சொன்ன விசாரணைகர்த்தர், (3) மூன்று மாதங்களுக்குப் பின், உம்முடைய மனுவை (file) கோர்வையில் கோர்த்துவிட்டோம் உமக்கு பதில் சொல்லுவதில்லை என்றனர்: இதுவிஷயமாய், மறுபடி அவர்கள் நேரில் போய்ப்பார்த்து. பேசலாமா என்று கேட்டதற்கு, அவரிடத்திலும் போய் பேசக்கூடாதென்று சொல்லிவிட்டனர்.

இந்த 11-வித அதிஅவசரபீஷ்டங்களில், "ஸ்ரீவேங்கடேசர் வெகுநாட்களாய் பட்டினியென்பது ஓர் விஷயம்.

"ஸ்ரீவேங்கடேசர் குபேரனிடத்தில் வாங்கின கடன் தீர்ந்துவிட்டதால். இனியும் இவருக்கு கிட்டிப்பூட்டிடுதல், (விலங்கிடுதல்) கூடாது என்பது, இன்னொன்று.

விசேஷ குறிப்பு: — "ஸ்ரீ கலோ வேங்கடநாயகருக்கு கிட்டிப்பூட்டிடுதலை உடனே நிறுத்தி, இப்பேருலகம் க்ஷேமங்களடைய." சர்வலோக ராட்ய ஸ்வராஜியத்தை நம் ஸ்ரீவேங்கடேசப் பெருமானுக்கு, சமர்ப்பிக்க ஆயத்தமாயிருக்கும், சித்தசமாஜ மஹனீயர்களின் வேண்டுகோளை மறுத்து, மீண்டும் கிட்டிப்பூட்டிடுதலானது அவைதிகமானதும், அசுரப்பிரீதியானதும் பைசாசெயமானதும், ஸ்ரீவிஷ்ணு சக்திதேவிகளின் கோபாவேச வீட்சண்யங்களினாலே, தண்டிக்கப்பட காரணர்களாவார்களென்றும், இப்பேருலகத்திற்கே பெரும் அபாயமாக முடியுமென்று, வற்புறுத்தியிருப்பதையும் திருப்பதி தேவஸ்தானத்தார் கவனியாதிருக்கின்றார்கள் : இது விஷயமாய், இந்து-மதஸ்தர்கள் மாத்திரமன்றி, இப்பேருலகத்திலுள்ள சகல ஜாதி குல மத பக்தர்களும் நாங்கள் இனி செய்யவிருப்பதை கவனித்து ஆதரிப்பீர்களென்று பிரார்த்திக்கின்றனன்.

தையாலும் *சென்ற 17-* பதினேழு வருஷகாலமாக தடைபட்டுவருகிறது. இனியேனும் அறிந்து அக்கடன்களை செலுத்துதல்.

30. மஹாமாட்சிமைகள் மிகுந்த, திருவாங்கூர் மகாராஜா அவர்கள், கொச்சிமகாராஜா அவர்கள், மைசூர்மகாராஜா அவர்கள் நேப்பாளமகாராஜ அவர்கள், (H. H. The Nizam) நைஸாம் அரசர் அவர்கள், முதலிய சுதேச ஆளுவோர்களையும், இதுபோலவே, பிராஞ்சு-ருஷியா, சீனு, ஜெப்பான், ஆப்கானிஸ்தானம் ஐரோப்பிய துருக்கி, தென்ஆப்பிரிக்கா டிரான்ஸ் வால்போவர் குடியரசு, யூனைட்டெட் ஸ்டேட்ஸ் அமெரிக்கா, மற்றும் உலகத்தின் நானாவிதமான இராஜாங்கங்களான அன்னிய ராஜாங்கங்களும்,

"ஸ்ரீவேங்கடேச விராட்கோவிந்தஸ்வாமி அவர்களுக்கு"

1902ஹு த்திலிருந்து இன்றையதேதிவரையில் அஜாக்கிரதையாயிருந்து, ஆலசியம்செய்து, செலுத்தப்படாம லிருந்தனவும், இவர்கள் யாவரும் செலுத்தவேண்டிய ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்டதும், பலவிதப்பட்டவைகளுமான *"சித்திர விசித்திர காணிக்கைகடன்களை" உடனேயாவது, அல்லது கூடிய சீக்கிரத்திலாவது செலுத்தி, தேவக்கடன்பாக்கியை தீர்க்கும்படிக்கு, சித்த சமாஜம், கட்டாயமும் அவசரமும் படுத்துகிறதையும், இவர்களுடைய ரட்சைக்காகவும், க்ஷேமங்களுக்காகவும் வேண்டிய தேவநுக்கிரகங்களை பெற்றுக்கொள்ளும்படிக்கும், (சித்தசமாஜம்) வேண்டிக்கொள்ளுகிறதையும் அங்கீகரித்தல்.

குறிப்பு:—மேலே சொல்லிய தேவக்கடன்பாக்கி விஷயமாய், அவரவர்களின் கணக்குவிபரங்களை, "தேவரகசிய சித்தாந்த உண்மை" 1-ம்பாகம், என்னும் நூலின் 93-ம், பக்கமுதல், 98-ம் பக்கங்கள்வரையிலும், மற்றும் இப்புத்தகத்தின் மற்ற சிலபக்கங்களிலும், மற்ற இவர்களின் தேவக்கடன்விஷயமாய் முன்னெச்சரித்து தெரிவிக்கப்பட்ட மனுக்களிலும் வாசித்து தெரிந்துகொள்ளலாம்.

31. இந்தியர்கள் தங்களின் ஸ்வராஜ்யத்தை தப்பாமல் பெறுவார்களென்றும், இவர்களின் இந்திய ஸ்வராஜ்யத்தைப் பெற்றுக்கொள்ள, தயாராக யிருக்கவேண்டுமென்றும், இவ்விந்தியர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டும், முன்னெச்சரிக்கை செய்யப்பட்டு மிருக்கிறார்களென்னும் சித்தசமாஜ உறுதிமொழிகளை அங்கீகரித்தல்.

32. இவ்வித இந்திய ஸ்வராஜ்யத்தைப்பெற, சர்வ ஆயுதமாக யில்லாத இந்தியமாதாவின் மக்கள்யாவரும், சவுக்கடி அடிக்கும் ஆட்

---

சென்ற 17-வருஷங்களாக என்றது, இந்நூல் ஆக்கப்பட்ட 1910ஹு வரையில் இத்தனைவருஷ காலமென்பதை தெரிவிக்கிறது. ஆனால் இந்நூலை அச்சிட்டுப் பிரசுரிக்கப்படுகிற இந்த 1925 வருஷத்தோடு, 32-வருஷங்களாகின்றனவென்று அறியவேண்டும்.

சமதேச எஜமானர்களுடன், இவர்களின் இந்திய ஸ்வராஜ்யத்தைப் பெறுவார்களென்று, சித்தசமாஜம் முன்னெச்சரிக்கும் உறுதிமொழிகளை அங்கீகரித்தல்.

33. இந்திய ஸ்வராஜ்யத்தை பெற்றுக்கொள்ளத் தயாராகதா இந்தியமக்களும், இதுபோலவே தங்கள் தங்கள் ஸ்வராஜியங்களைப் பெற்றுக் கொள்ளத் தயாராகாத நானாதேசங்களிலுள்ள இப்பேருலகமக்களும், இவர்கள் பேசுவதுபோலவும் நினைப்பதுபோலவும், ஒழுக்கத்திலும் நடந்துகொள்ள கற்றுக்கொண்டு, கீழ்படிந்து நடக்கும் வரையில், சூட்சுமமயமாய் சவுக்கால் அடிக்கப்படுவார்களென்றும், இந்தசவுக்கடிகளானவை பட்டாக்கத்தியின் வெட்டுகளைப்போலிருக்குமென்றும், சித்தசமாஜம் முன்னெச்சரிக்கும் உறுதிமொழிகளை அங்கீகரித்தல்.

34. ஸ்தூல இந்தியா அல்லது, பூதபௌதீக இந்தியாவுக்கு பிராணனாயிருக்கும் சூட்சுமஇந்தியாவை விருத்திசெய்து, தழைக்கச் செய்து, இந்தியமாதாவின் சற்புத்திரர்களாக ஆகவேண்டுமென்றும், இதுபோல் இப்பேருலகத்தின் ஒவ்வொரு தேசமக்களும், இவ்விதமே தங்கள் தங்கள் ஸ்தூலமயதேசங்களை, சூட்சுமமய சக்திகள் அமைய விருத்திசெய்ய வேண்டுமென்றும், சித்தசமாஜம், முன்னெச்சரிக்கும் உறுதிமொழிகளை அங்கீகரித்தல்.

35. இப்போது சூட்சுமாம்ஸ களஞ்சியத்திலிருந்து ஜ்வாலிக்துக்கொண்டும், இந்தியபூபிரதேச மேல்பாகத்திலும், இதன் (இந்தியாவின்) உள்பாகத்திலும், இதில் (இந்தியாவில்) அடங்கியுள்ளவைகளிலும், அதனுடைய (ஜ்வாலையான) கிரணங்களை செலுத்திக்கொண்டுமிருக்கும், பெரிய தேவாம்ஸவெளிச்சத்தை ஜாக்கிரதையாயும், இடைவிடாமலும் பார்க்கும்படியாகவும் மஹாராஜனங்கள் அங்கீகரித்

36. இந்த தேவாம்ஸமானதும், விசித்திரமானதுமான கிரணின் செய்கைக்கு விரோதமாயிருப்பவர்கள் யாவரும், இவர்க.ய ஸ்தூலதேகங்களுக்கு உயிர்களாகவும், முக்கிய ஆதாரமாநக்கும், சூட்சும (புண்ணிய) தேகத்தை, சரியா வைத்துக்ளுவதற்கு வேண்டிய சௌகரியங்களை, தலைகீழாய் கவிழ்த்துதற்கு, காரணராவரென்றும், சித்தசமாஜம் கேட்டுக்கொள்ளுவ', மீண்டும் மீண்டும் ஞாபக மூட்டுவதையும், இந்திய மஹாள் அங்கீகரித்தல்.

7. சித்தசமாஜ மஹனீயர்களின் மேலே சொல்லியிருக்கிறக்கிய வேண்டுதல்களை, இந்தப்பெரிய உலகத்திலுள்ள காருளுவோர்களான பிரஜாதிபதிகளும், இந்தபேருலகத்தின் பலங்களுக் குட்பட்ட ஆள்ப்படுவோர்களான பிரஜைகளும், ஷயமாய் முன்னெச்சரிக்கை செய்யப்பட்டிருப்பதுடன்...

தேவாம்ஸ ஜ்வாலா கிரணத்தாலுண்டாகும் காரியங்களையும், இவற்றின் அதிகப்படியான எதிர்பாராத மாறுதல்களையும் சம்பவங்களையும் ஏற்றுக்கொள்ளுவதற்கு சர்வசித்தமாயிருக்க அங்கீகரித்தல்.

38. ஐரோப்பாவிலுள்ள பாரிஸ் (Paris) நகரில்கூடும் சர்வதேச சமாதான சங்கத்தின் விஷயமாய், 15-1-1919ம் தேதியில் தெரிவிக்கும் சித்தசமாஜத்தின் மத்தியதர மஹரிஷியர்களின் (The Intermediate class of Sages of the Siddha Samaj) 16-வது உறுதிமொழி; முன்னெச்சரிக்கை பின்வருவதாம்:—மக்களுக்கு க்ஷேமமும் ரட்சையும் உண்டாயிராதபோது இப்போது, பிரஸ்தாபனையிலிருப்பதும், அதி அவசரமாயிருப்பதுமான சமாதானமுமில்லேவேயில்லையாம். ஆனால், இப்படிபெறும் சமாதானமானது, மேலே சொல்லிய க்ஷேமங்களையும் ரட்சைகளையும், கூடுமானவரையில் அவற்றின் உயர்தர அந்தியநிலைவரைக்கும் பலப்படுத்திவிட சக்தியுள்ளதாயிருக்காது: ஷை க்ஷேமங்களையும் ரட்சைகளையும், சம்பாதித்துக்கொள்ளுவதற்கு, மேலே சொல்லியிருக்கிற தேவாநுக்கிரகங்களும் சித்விலாச புண்ணியங்களும், அதிமுக்கியமாய் வேண்டியதா யிருக்கின்றனவென்று அங்கீகரித்தல்.

39. ஓர்வித தேவாநுக்கிரகங்களையும், ஓர்வித சித்விலாச புண்ணியங்களையும் பெறுநிமித்தம், எந்தபூபிரதேசம்—தேசம்—மதம்—அல்லது மனிதன், அதனுடைய அல்லது தன்னுடைய, மற்றொரு சதாசாரத்தையாவது, சதாநுஷ்டானத்தையாவது கொன்றுவிடவும் கூடாது: இவைகளை கெட்டுப்போகவும் விடக்கூடாது: இவைகளை வாடிப்போகவும் விடக்கூடாது: இவை சாகும்படியாயும் செய்துவிடக்கூடாது: அல்லது அநுஷ்டிக்காமல் அசிரத்தையாய் முற்றும் விட்டுவிடல், அல்லது அவைகளை அனுஷ்டிப்பதில் ஆலசியப்படுத்துதல், அல்லது பைசாசங்களும், பூதங்களும் ஹாவாஹனிக்கும் மக்களின் சௌகரியங்களுக்கும் சந்தோஷத்திற்கும் ஒத்துவரும்படி மேலேசொல்லிய தருமாநுஷ்டானங்களை, சிறுகவாவது முற்றுமாவது மாற்றவுங்கூடாது, என்று அங்கீகரித்தல்.

40. மேலும் தேவாநுக்கிரகங்களையும் சித்விலாச புண்ணியங்களையும் அடைவதற்காக மேலேசொல்லிய தருமாநுஷ்டானங்களையும் சித்தாந்தங்களையும், கூடவே, பூர்வீகர் அவர்களின் அபாய சமய சந்தர்ப்பங்களை முன்னிட்டுச் செய்துக்கொண்ட உறுதிமொழிகளான பிரமாணிக்கங்கள் (Oaths), இவர்களின் வாக்குத்தத்தங்கள் (Promises) சரீரமன ஆன்ம உணர்ச்சிகளின் அபிவிருத்திக்குரிய அநுஷ்

டானங்களாகவும் பழக்கவழக்கங்களாகவும், அந்தந்த தேவநம்பிக்கைகளுக்கும், மதக்கொள்கைகளால் அந்தந்த * பூபிரதேசங்களுக்கு ஒத்தனவாயும் தக்கனவாயுமிருக்கும் வழக்கங்களும் ஆசாரங்களுமென்று கட்டளையிடப்பட்டுள்ளவைகளும், அல்பமானதாம் வீண்காரியங்களுமான சடதத்துவசாஸ்திர (Mechanics) சௌகரியங்களினிமித்தமும், அவைகளால் அடையும் சிற்றின்பங்களுக்காகவும் (Pleasures) மாற்றக்கூடாதென்றும், இப்படி மேலே சொல்லியிருக்கிற முன்னெச்சரிக்கைகளுக்கு மாறுபட்டு மாற்றி, இப்பேருலகத்திற்கு பின்னுமொரு புதியதும் அதிகப்படியானதுமான பேராபயத்தை விளைத்துவிடக்கூடாதென்றும் அறிந்து அங்கீகரித்தல்.

41. சித்தசமாஜத்தின் உறுதிமொழி:—மேலே சொல்லிய தேவாநுக்கிரகங்களையும் சித்விலாச புண்ணியங்களையும் அடையுனிமித்தம், மேலே விலக்கும்படி சொல்லியவைகளையெல்லாம் விலக்கிவிட்டு, ஒவ்வொருவரும் மேலே சொல்லியிருக்கிறபடி, அதிஜாக்கிரதையாயும் சிரத்தையாயும் மேலே குறிப்பிட்ட அந்தந்த தேசாசாரங்களுக்குரிய பாரம்பரா தருமாநுஷ்டானங்களை அநுஷ்டிக்கவும், இடைநடுவே விட்டுவிடாமல் பூர்த்தியாய் நிறைவேற்றவும் வேண்டுமென்றும், இப்படிச்செய்வதினால் அவரவர்களுடைய சூட்சுமதேகம் பரிபக்குவமடைந்து பலப்படுமென்றும், சித்விலாச புண்ணியஸ்வரூபங்கள (The Personified Astral gains) அவர்களை ரட்சிக்குநிமித்தம் துணையாய் அமர்ந்து, இவர்களுக்கு க்ஷேமங்களை உண்டாக்கிக்கொடுப்பதில், பாதுகாவல் தாய்தந்தை (Guardians) களாயிருந்து, நம்மை அநுக்கிரகிக்குநிமித்தம், கருணாநிதியாயும் சர்வக்ஞராயுமிருக்கும் சர்வேஸ்வரனுக்கு, தேவதூத மத்தியஸ்தமாயிருக்குமென்றும், சித்தசமாஜத்தின் உறுதிமொழிகளை அங்கீகரித்தல்.

42. மேலே தெரிவிக்கப்பட்டவைகளால் தருமாநுஷ்டானங்களும், பூர்வீகர்கொடுத்த வாக்குத்தத்தங்களும், சத்திய பிரமாணிக்கங்களும், இவைபோன்றவைகளும் கொல்லப்பட்டு வருகிறபோதும், இனியும் இப்படியே கொல்லப்பட்டு வரும்போதும், இப்பேருலகத்திற்கு க்ஷேமங்களும் ரட்சைகளுமில்லையென்றே நாம் நன்றாய் தெரிந்துக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது. இப்படியானால், இந்தப் பேருலகமுழுவதிலும் "சமாதான" மெனபது இல்லவே

---

* பூபிரதேசம் (Soil) என்பது:—ஓர் சுற்று பாங்கு எல்லை அளவுக்குட்பட்ட பூமி என்று சொல்லப்பட்டாலும், இங்கு சீதளம் உஷ்ணம் முதலானவைகள், கொள்கை, சம்பிரதாயம், ஆசாரம்-வழக்கபழக்கங்கள், சர்வதருமாநுஷ்டானங்கள், பாஷை, ஆட்சி, பெரியோர்களின் சுபாநுக்கிரகங்கள், தேவர்களின் சித்விலாச புண்ணியங்கள், முன்னோர்கள் அவரவர்களின் ஆபத்துக்களின்போது, பிரமாணிக்கங்களாகவும், உறுதிமொழிகளாகவும், கொடுத்த உறுதிவாக்குகள் இவைமுதலியவைகள் அநுஷ்டிக்கப்படும், அல்லது முன்போ, இப்போதோ வியாபித்துவரும், பூமியின் சுற்றளவுக்குட்பட்ட ஸ்தலத்தையே, சித்தசமாஜத்தினர், "பூபிரதேசம" என்று வழங்குகிறார்கள்.

யில்லையாகும்: உண்மையான சமாதானமென்பது, அல்லது ஓர்வித சாந்தமென்பது, நமது ஸ்தூலதேகத்தினுள் இருக்கும், சூட்சும தேகத்திலிருந்தும் (The astral body) மனதின் உத்தமபாகத்தி லிருந்தும் (The Higher Manas) ஜனிக்கிறதென்றும், பகவானுக்குப் பிரியமானதென்றும், நன்மைகளை விளக்கும் சூட்சும தேகிகளான தேவர்கள் முதலியோர்களுக்கு அதிப்பிரியமானதென்றும், நாம் கியாபகத்தில் வைத்திருக்கவேண்டியதென்றும் அங்கீகரித்தல்.

43. (ஆனால்) வெளிமாத்திரமான அல்லது உண்மையல்லாத, சமாதானமானது மேலேசொல்லிய உண்மையான சமாதான இலட்சணங்களுக்கு மாருக, வசனமாத்திரத்தில் தெரிவிக்கப்படும் வைஷம்யாதிகளின் ஆதரவுகளைப்பெற்று மிருப்பதால், இது பூதங்களுக்கும் பைசாசங்களுக்கும் பிரீதியானதும், நெருங்கிவரும் வருங்காலத்தில், பெருமிதமான துக்கசம்பவங்களான பிரதிபலனங்கள் நம்மை மேற்கொண்டு வருவதற்கு நிச்சயமாய் சக்தியுள்ளனவாயிருக்குமென்றும், அறிந்து ஞாபகத்தில் வைக்கவேண்டிய முக்கியமானவைகளில் ஒன்றென்று அங்கீகரித்தல்.

விசேஷக் குறிப்பு:—ஆதலால் மேலே உலக சமாதான சங்க விஷயமாய், தெரிவித்திருக்கிற 15 அல்லது 16-வித சித்த சமாஜத்தின் உறுதிமொழிகளும் உண்மையான சமாதானத்தை பெறுவதற்கு உபயோகமாயிருக்கிறதென்றும், சர்வதேச சமாதான சங்கத்திற்கு அனுப்பத் தக்கவைகளா யிருக்கின்றனவென்றறிந்து, அங்கீகரித்து, இவைகளுக்கு ஆகவேண்டிய சாதனசௌகரிய காரியங்கள்யாவையும்செய்து, பகவானுடைய திவ்வியானுக்கிரகத்தையும், சித்சமாஜ மஹனீயர்களின் திருவருள் ஆசீர்வாதங்களையும்பெற்று, என்றும் ரட்சையும் க்ஷேமமும்பெற்று சமாதானசாந்தத்தில் இந்தப் பேருலகம்வாழ்ந்து, அதிசீக்கிரத்தில் நெருங்கிவரும் சத்தியகாலமென்னும் புண்ணியகாலத்தையும் அடுத்துவரும், ஸ்ரீவெங்கடேசப்பெருமானுடைய திருவவதாரம், சர்வலோகராட்ய ஸ்வராஜ்யத்தையும் தரிசித்து, பேரானந்தத்தையும் சதானந்தத்தையும், அடைந்து அநுபவித்து, சுகமேசுகவாழ்வு வாழ்வீர்களாகவென்று, சித்தசமாஜ மஹனீயர்கள் உறுதிகூறுவதை அங்கீகரித்தல்.

தேவானுக்கிரக சாதனஉறுதிமொழி முன்னெச்சரிக்கைகள்.
ஸ்ரீவேங்கடேச வசீஷ்ட வநுக்கிரகசாதன பரிபாலனங்களினு லுண்டாகும் — (வருங்கால) பலப்பிராப்தங்கள்:

44. மேலே சொல்லியிருக்கும் (43) நாற்பத்திமூன்றுவித விதிகளும் சித்த சமாஜத்தின் மத்தியதா மகனீயர்களென்று சொல்லப்படுகிற மஹான்களின் (The Intermediate class of Sages of the Siddha Samaj), கருணாரசமான ஆசிர்வாத திவ்வியாக்ஞைகளாதலாலும், ஸ்ரீவேங்கடேசாது அபீஷ்டமான திவ்வியானுக்கிரகத்தை சுரப்பித்துக் கொடுக்க சாதனங்களாயுள்ளவைகளாதலாலும்,

இவைகளைத்தவருமல் அநுசரிக்கும் சர்வத்திராளும், அவரவர்களின் அபாயம்பீதியாதி அல்லல்கள் நீக்கப்பெறுவதினிமித்தம், ஸ்ரீவேங்க டேசருடைய கிருபாவநுக்கிரக ப்ரஸாதங்களை * சரிபாகம், (சமபா கம்) முதல் அவ்வவத்திற்கு தகுந்தபடியான அளவுப்படி கிரு பாவநுக்கிரக பிரஸாதங்களை பாகப்படுத்தி கொடுக்கப்பெறுவர், என்று அங்கீகரித்து, அதற்குத்தக்கபடி ஒழுகுதல்.

45. ஸ்ரீவேங்கடேசருடைய கிருபாவநுக்கிரகமானது, சரிபா கம் (சமபாகம்) முதலிய பாகாசாரப்படி சர்வத்திராளுக்கும் பகுந்து கொடுக்கப்பட்டுவராமல், இவர் குபேரனிடத்தில் கடன்வாங்கினதி னிமித்தம், குபேரனது மரபின்வழிசேர்ந்த பலதிறப்பட்டவர்களுக் கும், இதுவரையிலும் மிகுதிப்பாடாகவே கொடுக்கப்பட்டு வந்தது. இப்படி கொடுக்கப்பட்டுவந்த பெருமித அநுக்கிரகமானவைகளை குபேரனது (1) அசுர (2) மானுஷீக (3) மிஸ்ரமயம் ஆகிய மூன்று (3) விதத்தவர்களான கோத்திரசம்பந்தமானசிலர், தக்கபடி செல விடாமலும், வீணேசேதப்படவிட்டும் வருவதானூர்கள். நம்பாவங் களினிமித்தம், ஸ்ரீனிவாசரின் திருக்கலியாணசாக்கிட்டு, குபேர னிடத்தில் வாங்கினகடன், இப்போது தீர்ந்துவிட்டபடியாலும், இவ ரது (ஸ்ரீவேங்கடேசரது) * திருப்பாத கமல கிருபாரசவெள்ளப் பிரவாகித்தும், இவரது புருஷோத்தம மூர்த்திகரம் பிரபாவப்பட் டும் விளங்கும் காரணத்தினுல், மேலேசொல்லிய விதங்களான, ஸ்ரீ வேங்கடேச அபீஷ்டகாரியங்களின்வழி நின்றொழுகு , சகல தேச ஜாதி-குல மக்களுக்கும், இவரது அநுக்கிரகங்களை சமபாகம் முத லிய மேலேசொல்லியிருக்கும் விகிதாசாரமாய் பகுத்து கொடுக்க, வரப்படுமென்றும், ஆகலால், இவைகளுக்கேற்றவாறு ஒழுகவேண்டு மென்றும் சகலரும் முன்னெச்சரிக்கை செய்யப்படுகிறூர்களென்று, அங்கீகரித்து அதற்கேற்றவாறு ஒழுகுதல.

மங்களம் ! மங்களம் ! மங்களம் !

சாந்தி ! சாந்தி ! சாந்தி !

சுபம்! சுபம்! சுபமஸ்து !

---

* சரிபாகம் முதலியனவென்பது.—சித்தசமாஜ பிரசுரங்களில் 5-வித தேவரகசியக் களஞ்சியமுதல் நூல்கள்" என்னும் ஐந்துவித நூல்களில்,— "தேவரகசிய சித்தாந்த உண்மை—பாகம் 5," என்னும் நூலானது ஒன்றுகும் இந்த நூலின் 17-வது பிரிவானது, "சித்விலாசங்கள் ஜனிப்பிக்கும் உபாயம்" என்னும் விஷயமாய் தெரிவிக்கின்றது. இந்த 17-வது பிரிவின்-11-வது பத்தியில், பின்வருமாறு தெரிவித்திருக்கிறது. —" அன்னப்பட்சியானது நீரினின்றும் பாலைப்பிரித்தெடுக்குமென்று, சொல்லப்படுவதுபோல, யாதொ தக்க மகாத்மிய, பிரம்மோபாயத்தினுலே அவ்வச்சந்தர்ப்ப உரிமைகளுக்கேற்ற வாறு, சித்தசமாஜத்தவர்களின் சொந்தபாகமான சமாம்ஸம், இஃதே பாதி பாகம், பஞ்சாம்ஸம் அதாவது ஐந்திலொருபாகம்: தசாம்ஸம் அதாவது பத்தி லொருபாகம், சதாம்ஸம் அதாவது நூற்றிலொருபாகம், ஸஹஸ்ராம்ஸம் அதாவது ஆயிரத்திலொருபாகம் என்று, இப்படியாக ஜீவன்முக்த ப்ரோட் காலோதய உரிமைப்பாகமாக சேர்க்கப்படும்.

ஸ்ரீவேங்கடேசராது சர்வலோகராட்ய ஸ்வாராஜ்யமும்,
* 51-வித சர்வோத்தம விதிகளும்.

(46) கோவினங்களின் பூமியாகிய கோபூமிகளையும், கோமானியங்களையும் அபகரித்தலாதிகளைச் செய்தவர்கள் ஸ்ரீவேங்கடேசராது திருவருளுக்கு அருகரல்லாதவர்களேயாவர் என்பது:—ஸ்ரீவேங்கடேச கோவிந்தப்பெருமானுக்கும், சர்வதேவர்களுக்கும், அதிப்பிரியமான கோபரிபாலனத்திற்கு விரோதமாயிருப்பவர்களும், இக்கோபரிபாலன ஆளுகையை இந்தியாவிலும், சர்வபூமண்டலத்திலும், சீக்கிரத்தில் விருத்தியாகி, பரவிவரும்படிச்செய்து வருவதற்கு தடைசெய்யுமவர்களும், கோபரிபாலன விஷயங்கள் இன்னின்னவைகளென்று, நன்கு அறிந்து, அநுஷ்டியாதவர்களும், கோவினங்களாகிய (பசு—மாடு—கன்று) இவைகளின் விருத்திக்கும், இவைகளின் பசி ஆற்றலுக்கும், இவை ஜீவித்திருப்பதற்கு பிராணாதாரமாயிருக்கும், இக்கோவினங்களுக்கு தொண்டுதொட்டு பல பூபாலர்களால், பூர்வம்தொட்டு, இதுகாலம்வரையில் சொந்தமாக விடப்பட்டவைகளும், இக்கோவினங்களுக்கே, சொந்தமாயிருப்பவைகளும், அந்தந்த பட்டணம், கிராமம், குக்கிராமங்களிலுமுள்ள, "கோபூமி" என்னும், கோவினங்களின் மானியங்களை, அக்கிராமவாசிகளாவது, மற்ற எவர்களாவது, பின்னப்படுத்தவாவது, கிருஷித்தொழில் நடத்தவாவது, அபகரிக்கவாவது, தர்காஸ் எடுக்கவாவது, இவை முதலிய எவ்வித கோதரும விருத்தமான காரியங்களைச் செய்யுமவர்களும், மேலே கோவினங்களுக்கு அநுகூலமான காரியங்களாகச் சொன்ன காரியங்களுக்கு விரோதமாய் மாறிச்செய்பவர்கள் யாவரும் ஸ்ரீவேகடேச கோவிந்தப் பெருமானது, திருவருளுக்கு அருகரல்லாதவர்களே யாமென்று அங்கீகரித்தல்.

(47) பஞ்சமர்கள் கோமாம்சம் உண்ட சண்டாளத்துவத்தையும், பிராமணாதி சாதுர்வருணத்தவர்கள் பஞ்சமர்களுக்கு கோமாமிசம் உண்பித்த சண்டாளத்துவத்தையும், நீக்கிக்கொள்ளுதல்:- "கோபிராமணே" என்று பிராமணனுக்கு முந்தி (பசு) கோவை சிரேஷ்டப்பட சொல்லியிருப்பதால், இதற்கு விரோதமாய், அக்கிரவர்ணத்தவர்களான பிராமணர்க்ள் உட்பட சாதுர்வருணத்தவர்களும், தங்கள் பசுநிரைகளில் மரிக்கும் பசுவினங்களை, பஞ்சமர்களுக்கு உண்ணக்கொடுத்து, இப்பஞ்சமர்கள் இப்படி உண்டதினால், அவர்களைத்தீண்டவும் (ஸ்பரிசிக்கவும்) அருகரல்லாதவர்களென்னும் சண்டாளர்களென்று, ஒதுக்கிவருகின்றார்கள். இதுபோலவே, இப்பிராமணராதி நான்கு வருணத்தவர்கள், ஐந்தாம் வருணத்தவர்களான பஞ்சமர்களுக்கு மேலே சொல்லியபடி கோவினங்களை உண்ணக்கொடுத்ததினால், இவர்கள் உண்பித்த சண்டாளர்களாயிருப்பதால், இவர்களைத் தீண்டப்படாது (ஸ்பரிசித்து. ஹாவாஹனித்து)

* 45-விதமென்று வரும் மிடங்களிலெல்லாம் 51-விதமென்று திருத்திப் படிக்கவும்.

இவர்கள் கொடுக்கும் பிதுர்பூஜையாதிகளுக்கு பூரணமான பிரதி பலன்களை கொடுக்கக்கூடாதென்று, வெறுத்தும், துக்கித்தும் எட்ட நிற்கின்ற இவர்களின் மூதாதைகளாகிய பிதுர்தேவதைகளின் அபீஷ்டங்களுக்கு உட்பட்டு, பஞ்சமர்களுக்கு கோவினங்களை உண்பிக்காமல் மரித்த கோவினங்களை பூமியில் சமாதிசெய்து, பூஜிப்பதும், பஞ்சமர்கள் இனியேனும், கோவினங்களை இம்ஸைசெய்யாமலும், புசிக்காமலுமிருக்க பிரதிக்ஞைசெய்து, இவர்களது பூர்வகர்ம சாபமாகிய தீண்டாமையை (ஸ்பரிச தோஷத்தை) நீக்கி, மைசூர் ராஜியத்தைச்சேர்ந்த, ஸ்ரீயாதவகிரி என்னும் மேல்கோட்டை ஸ்ரீமந் நாராயண சுவாமிகளின், திருக்கோவிலினுள், நீங்கள் போக எப்படி ஸ்ரீவைஷ்ணவமத ஜகதாசாரியரான ஸ்ரீ ஆதிராமாநுஜாசாரியசுவாமிகளின் திவ்வியாக்ஞையால், பிரதிவருஷத்திலும்,(3) மூன்று நாட்கள் கோவிலினுள்போய் சேவித்தலாதிகளுக்கு,சர்வசுதந்திரம் பெற்றுள்ளீர்களோ, அஃதேபோல, 360 நாட்களாகிய வருஷமுழுவதும், நீங்கள் பிராமணாதி சாதுர்வருணத்தவர்களுக்கு. சரிசமமாய், இந்துமத சர்வ சுதந்திரங்களை சுயேச்சையாய்ப் பெற்று, அநுபவிக்கும் பேரவா மேலிட்டவர்களாய், (33) முப்பத்திமுக்கோடி தேவர்களுக்கு விரோதமான, கோகண்டனத்தையும், கோபட்சணத்தையும், அறவே விட்டு, கோபூஜையைச் செய்து, உங்களின் பூர்வ சாபம் நீங்கப்பெற்று, சுகவாழ்வடைவீர்களென்று அங்கீகரித்தலும், இதுபோலவே, கோபட்சணமாதிகளை செய்விக்காமல், அறவே ஒழித்து, பிராமணாதி சாதுர் வருணத்தவர்களும், இவர்களது பல சிறு சாயங்களும், இவைகளுக்கெல்லாம் அதி மேலானதாயும், இவர்களின் தலைகளின்மேல் ஏறி நின்று, இவர்களை விடேன்விடேன் என்று தாளங்கள் போட்டுவரும், ஹூணராஜ சேவகமாதிகளையும், ஒழித்துவிட நேர்சாதனமென்றும் அங்கீகரித்தல்,

(48) 6-வது குலத்தவர்களான அருந்ததிகாவம்ஸ கோஷங்கிகளின் சட்டாயக் கடமைகள்:—பஞ்சமர்களென்னும், 5-வது குலத்தினர்களுக்கு, கீழ்ப்பட்ட, 6-வது குலத்தினர்களை சக்கிலிகள் என்றும் வழங்கும் இப்பேருலகம் : போற்றுதற்குரிய ஸ்ரீஅருந்ததிகா சமூகத்தினர்கள் இவர்களின் சாபங்கள் நீங்கப்பெறுகிறதற்கு, ஸ்ரீ வேங்கடேசரது கிருபா வநுக்கிரகங்களைப்பெற, அருகர்களாவதற்கும், இப்பேருலகத்திலுள்ளவர்களால், போற்றப்படுவதற்கும், பரத கண்டத்தின் உயர் உன்னத முன்னேற்றத்திற்கு அதி பிராணாதாரமான (கோமறியாதை) கோதருமவாசாரம் சம்பந்தமான அதி அவசரமாய் அநுஷ்டிக்க வேண்டியவைகளாவது:—

இன்று சுமார் 600 வருஷங்களுக்கு முன்னலே, ஸ்ரீகிருஷ்ண ஜில்லா அரசராய், திருவவதரித்த ஸ்ரீவீரநாராயணமூர்த்தியானவர், வடபாலார் நதிதீரத்தில், எர்ற கெட்டபாடு என்னும் வீரசமாதி க்ஷேத்திரத்தில், கோவினங்களை ரட்சிக்கும் விஷயமாய், ஓர் பெரிய

யுத்தம் நடத்தவேண்டியதாய் நேர்ந்தது: இதில் யாதவர்களான ஷை வீரநாராயணமூர்த்தியின் குலபந்து வர்கத்தினர் கோடிபேர் உயிர்துறந்தனர்: கோவினங்களுக்கு செய்துவரும் அநீதிகளை நீக்க ஸ்ரீவீரகங்காதேவியரின் திவ்வியாநுக்கிரகம் பெற்று, சரீரத்திரைய ஜீவன்முக்தர்களாகி, இன்றளவும் அகமுக திருஷ்டிபெற்று, வீரசமாதியிலிருக்கின்றார்கள்: நீங்கள் கோஷங்கி குலமென்று சொல்லப்படுகிறீர்கள். உங்கள் கோஷங்கி குலத்தினர் அன்று, ஸ்ரீவீரநாராயணருக்கு சகாயஞ்செய்ய, ஸ்ரீமான்-வீரநாயுடு என்னும் கோஷங்கி குல சேனைதலைவரின்கீழ் அமர்ந்து யுத்தம்செய்து, உங்களில் பலர் உயிர் துரந்தனர்: உங்கள் இனத்தவர் கோவினங்களுக்காக உயிர் துறந்த வீரர்களை வீரபூஜை வழியாக இன்றளவும் ஆராதித்து வருகின்றார்கள்: பஞ்சமர்களும் ஸ்ரீமான்-வல்லம நாயுடு என்னும், பஞ்சமகுலசேனைத்தலைவரின்கீழ் அமர்ந்துயுத்தம்செய்து பலர்உயிர்துறந்தனர்: பிரதாபங்கள் வகித்த சந்திரவம்ஸ க்ஷத்திரியகுலயாதவர்கள், இவர்களின் குடும்ப சுபாசுப காலங்களில், செய்துவரும் வீரபூஜைகளின்போது, உங்கள் நிமித்தம் வீரநாயுடுவுக்கும், பஞ்சமகுல நிமித்தம் வல்லமநாயுடுவுக்கும், பிரத்தியேகமான (2) இரண்டுவித ஆசீர்வாதக்கடன் தர்ப்பணங்களை இன்றளவும் செய்து. சர்வகுலத்தினர்களும், வியக்கவும், சிலர் பலவிதஆட்சேபனைகள் செய்தும், உங்களை கௌரவப்படுத்தி வருகின்றார்கள்: இந்த கெரவத்தை நீங்கள் ஓர் பெரிய கௌரவம் என்று, பாராட்டவேண்டாமா? அந்த வீரநாராயணரே, இன்று ஸ்ரீவேங்கடேசப்பெருமானுடைய திருமேனியில் அம்ஸமாய் அமர்ந்தருளுவர் மேலும் உங்கள் மூதாதையாகிய சேனைத்தலைவரான வீரநாயுடு அவர்கள், அன்று (அதாவது சுமார் 5000 வருஷங்களுக்கு முன்) ஸ்ரீகிருஷ்ணபகவான் கோவர்தனகிரியை இவாது சுண்டு விரலால் உயரத் தூக்கி, தேவேந்திரன் செய்த கொடுமைகளினின்றும் கோவினங்களையும் கோபாலர்களையும் காத்தபோது, தேவேந்திரன் ஏவிய பேரிடியை ஸ்ரீகிருஷ்ணபகவான் தமது திவ்விய கரத்தால் பிடித்து அதை ஓர் பட்டாக்கத்தியாகச் செய்யப்பட்டு. ஸ்ரீகிருஷ்ணவம்ச யாதவகுல பாம்பரையில் வழங்கிவரப்பட்டது: இவ்வித தேவேந்திர இடியானதும், எவராலும் தூக்கி கையாள ஆகாததுமான பட்டாக்கத்தியை கடைசி நேரத்தில் எடுத்து, சுழற்றி எதிரிகளின் பக்கல், பிரயோகிக்கப்படும் பட்டாக்கத்திக்கு வேண்டிய ஜனசங்கியான ஆகாரம் போதாதபடியால், எங்கு குற்றமற்றவர்களையும் கோபாவேசத்தால் தாக்கிவிடுமோவென்று, அதருமத்திற்கு அஞ்சினவராய், அந்தப் பட்டாக்கத்தியை அந்த வடபாலார் நதியின் மணலில அடியில் பாய மோதி அமர்த்தி, "சீக்கிரத்தில் நான் மறுபடியும் உன்னை வந்து ,எடுக்கிறேன் அதுவரையிலும் நீ இங்கிரு" என்று, உங்களது தேவாம்ஸ வீரர் (வீரநாயுடு அவர்கள்) கூறிய தேவாம்ஸ வார்த்தைகளை மறந்து விட்டீர்களா? மேலே யாதவர்கள்

உங்களுக்கும் பஞ்சமர்களுக்கும், கொடுத்துவரும் வீராராதன தரு மக்கடனுகிய ஆசிகளில், இதுவரையில் (அதாவது சென்ற சுமார் 600 வருஷங்களில் சேர்ந்த பெருமித சித்விலாச புண்ணியங்கள் யாவையும், சித்த சமாஜத்தார், உங்களுக்காக சேமித்து வைத்திருக் கின்றார்கள்: இதைப் பெற்றுக்கொள்ள நீங்கள் அதி சீக்கிரத்தில், அருகராவீர்களாக! ஆயத்தமாவீர்களாக!

(குறிப்பு) :— இவைகளன்றி, கோஷங்கி வம்சத்தார்களாகிய, உங்களில் ஓர் வகுப்பார் ஷை யாதவ சமூகத்தினர்களுக்கு, ஸ்ரீவீர கெங்காதேவி பூஜாவிஷயமாய் தொண்டுசெய்து வருகின்றார்கள்: இவர்கள் கோமாமிசபட்சணம் செய்வதில்லை: கோவினங்களின் தோலையும் உரிப்பதில்லை: இத்தோலால் ஆகவேண்டிய செருப்பையும் தைப்பதேயில்லை.

விசேஷக் குறிப்பு :— இப்படி (6) ஆறுவது குலத்தவராக யிருந்தாலும், கோவை மரியாதைசெய்யும் தருமத்தை அநுஷ்டித்து, குணவிசேஷத்தால், 5-வது குலமாகிய பஞ்சமர்களிலும் மேலான குணவாசார குலத்தவர்களாய் மாறி நிற்பதையும், நீங்கள் நிதரிசனமாய் உணர்ந்தறிந்தும், மேலே சொல்லிய பலகிறப்பட்ட வகையின் அளவாலும், நீங்கள் உங்களின் பூர்வ நிலைமையையும், தற்சமய அந்தஸ்த்தையும் யோசித்து, அறிவுபெற்று ஞானங்கொண்டு, உங்களுடைய வருங்கால க்ஷேமங்களினிமித்தம், ஸ்ரீவேங்கடேச கோவிந்தசுவாமிக்கு அதிப்பிரியமான கோபரிபாலன விஷயத்திற்கு, இனியேனும் விரோதமில்லாமல் இருப்பீர்களென்று, அங்கீகரித்தலும், அநுஷ்டித்தலும்:

விசேஷக் குறிப்பு:—(1) பிரதி வருஷத்திலும் வைகாசிமாத பருவத்தினன்று, கோடிகோபால குமார வீரவர்க்க சரீரத்யைய ஜீவன்முக்தர்களுக்கு, நெல்லூர் ஜில்லாவின் வட எல்லையாகிய எர்ற கெட்டபாடு என்னும் க்ஷேத்திரத்தில் வீராராதன பூஜைகள் அதி விமரிசையாய் நிறைவேற்றப்படுகின்றனர். இலட்சக்கணக்கான சர்வ சாதிகுலமக்கள் பயபக்தி விசுமாசமாய் பிரார்த்தனைக் காணிக்கைகளை செலுத்திவருகின்றார்கள்:

விசேஷக் குறிப்பு:—(2) இலமநாயுடு (இலமவாரு) குலத்தவர்கள் ஸ்ரீவீரநாராயணர் பக்கம் சேர்ந்து யுத்தம் புரிந்து உயிர் துறந்த வீரர்களின் வீராராதனத்தினிமித்தம், பிரதிவருஷம் கார்த்திகைமாதம், பருவதினத்தன்று, காரம்பூடி என்னும் க்ஷேத்திரத்தில் (இது பெஸ்வாடாவுக்கு சமீபத்தில் யிருக்கிறது) வெகு அற்புதமாகவே வீராராதனம் நடத்திவருகிறார்கள்.

(49) * மாட்டுத்தலை அரக்கனின் அட்டூழிய கொடுமைகள்: ராஜகுடும்பத்தில் மாட்டுத்தலைப் பிள்ளைகள் : அதிகாரவர்க்கத்தினர்

* இந்த அசுரனையே மகிஷாசூரன் என்பது.